# மகாபாரத துரௌபதி போல தெய்வீகக் களையோடு காட்சியளிக்க ஒரு வாய்ப்பு!

துரௌபதியின் சேலை நாரத அர்ஜுன அசல் தங்க ஜரிகை பார்டருடன் கூடிய ஒரு தூய பட்டுச் சேலை, பின்னி சிறப்பாக நெ செய்தது.

வி.பி.பி அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட சில பின்னி ஷோ ரூம்கள் மூலம் அதை உங்களுக்குக் கிடைக்கச் செய்கிறது, பின்னி.

உங்கள் அன்பிற்குப் பாத்திரமான ஒருவருக்கு இந்த "துரௌபதி சேலை"யை நீங்கள் அன்பளிப்பாக ஏன் வழங்கக்கூடாது? விசேஷமான பரிசுப் பார்சலில் நேரடியாக அவருக்கு, இந்தப் பரிசு உங்களிடமிருந்து வருகிறது என்ற அறிவிப்பு அட்டையுடன் பி அதை டெலிவரி செய்யும்.

அந்த தூய பட்டுச் சேலை பளபளக்கும் தங்க நிற மஞ்சள் வண்ணத்தில், தேர்ந்தெடுத்த கலர் பார்டர்களுடன் கிடைக்கிறது.

| Code: | R | NB | P | IB | SP | BG | CB |
|---|---|---|---|---|---|---|---|
| பார்டர்: | ரெட் | நேவிப்ளு | பிங்க் | இங்க்ப்ளு | ஷாக்கிங் பிங்க் | பாட்டில் கிரீன் | காப்பி ப்ரௌன் |

"துரௌபதி சேலை"யை வி.பி.பி மூலம் ஆர்டர் செய்ய இந்தக் கூப்பனை பூர்த்தி செய்து கத்தரித்து, தபாலில் அனுப்புங்கள்.

ஆம், 5.5 மீட்டர் தூய பட்டில் அசல் தங்க ஜரிகை பார்டருடன் கூடிய "துரௌபதி சேலை"யை, மாட்சிங் பிளவுஸ் பீஸுடன் பெற விரும்புகிறேன்.

நீங்கள் விரும்பும் பார்டரின் நிறத்தைக் குறிப்பிட, அதற்குரிய குறியீட்டு எழுத்தைக் குறிப்பிடவும்.

சேலை வி.பி.பி மூலம் வரும்பொழுது தபால் கட்டணங்கள் உட்பட ரூ. 1995 (ரூபாய் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஐந்து மட்டும்) கட்டி அதை வாங்கிக் கொள்வேன் என வாக்குறுதி ☐

என் பெயர்: ______________________

______________________

எனது முகவரி: ______________________

______________________

மேலே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு சேலையை அடியிற் குறிப்பிட்டுள்ளவர் அனுப்பியதாக அனுப்பி வைக்கவும்.

______________________

______________________

இத்துடன் பின்னி லிமிடெட் பெயருக்கு வாங்கப்பட்ட ரூ 1995/-க்கான டிமாண்ட் டிராப்ட் இணைத்துள்ளேன்.

கூப்பனில் பொருந்தாதவற்றை அடித்து விட்டு, பொருந்துவனவற்றைப் பூர்த்தி செய்து அடியிற்கண்ட முகவரிக்கு அனுப்பவும்: பின்னி லிமிடெட், சில்க் டிவிஷன், அக்ரஹாரம் ரோடு, பெங்களூர்-560 023. தபால்பை எண் 2301

MM

Love
Rupa Ganguly

DRAUPADI COLLECTION

உங்கள் அன்பிற்குப் பாத்திரமான ஒருவருக்கு அழகான ஒரு பரிசு.

## பின்னி
### ப்யூர் சில்க் புடவைகள்

துரௌபதி புடவைகள் கீழ்கண்ட பின்னி ஷோ ரூம்களிலும் கிடைக்கின்றன.

**சென்னை:** ரத்தன் பஜார், சென்னை-600 001 & உம்முடியார்ஸ் ஷாப்பிங் சென்டர், அண்ணா சாலை, சென்னை-600 002.
**கோவை:** 357 ஒப்பணக்காரத் தெரு, கோவை-641 001.
**பெங்களூர்:** 115, N.R. ரோடு, பெங்களூர்-560 002 & 101/2 M.G. ரோடு, பெங்களூர் 560 001.
**பம்பாய்:** டிரான்ஸ்போர்ட் ஹவுஸ், ஷாஹித் பகத் ரோடு, பம்பாய் 400 039.
**டில்லி:** 9-E, கனாட் ஹவுஸ், கனாட் ப்ளேஸ், புது டில்லி-110 001.
**கல்கத்தா:** 2-B, கணேஷ் சந்திரா அவென்யூ, கல்கத்தா-700 013.

*Interpub/BL/6/89/T*

# அரசியல் பட்டாசு



"நான்தான் மூத்தவன். எனக்குத்தான் பெரிய வெடி..."




"இந்தத் திரியை மாத்தி வச்சுப் பார்ப் போம். பட்டாசு வெடிக்குதான்னு..."



"இந்த வருஷம் நம்ப பிராண்டு ஒத்தை வெடிதான். ஒண்ணே ஒண்ணு குடுங்க!"



"அது என்னங்க போஃபர்ஸ் வெடி?"

"கீழே டமால் டமால்னு வெடிக்கும். ஆனா மேலே போனா புஸ்ஸுனு போயி டும்!"



"தேர்தல் முன்னேற்ற மாத்திரை பாம்பு மாத்திரை மாதிரி கொளுத்தி னால் புஸ்ஸுனு சாம்பல்தான்."





"நீயும் பிடிச்சுக்கோ... தனித்தனியாக் கொளுத்தினாச் கட்டுக்குவோம்..."





"ரொம்ப வருஷம் கழிச்சுக் கொளுத்த காயம் படாம கொளுத் தீங்க... துங்க!"

கருத்து: எம். ஆர். ராஜன்.

# பொன்னியின் செல்வன்:

# கமலின் கனவுகள்...

**அமரர் கல்கியின் 'பொன்னியின் செல்வன்' நாவலைத் திரைப் படமாக எடுக்கத் திட்டமிட்டிருக்கிறார் கமல் என்பது பழைய செய்தி தான் என்றாலும் அத்திட்டம் பற்றி இதுவரை கமல் விரிவாக விளக்கியதில்லை. இப்போது கல்கி வாசகர்களுக்காக அதுபற்றிப் பேசுகிறார் கமல்......**

மொகல்—லே—ஆசம், உத்சவ் போன்ற சரித்திரப் படங்களைப் பார்த்து நான் பிரமித்திருக்கிறேன். தமிழில் அந்த மாதிரிப் படங்கள் வருவதில்லையே என ஆதங்கப்பட்டிருக்கிறேன். என்னைக் கேட்டால் வீர பாண்டிய கட்டபொம்மனுக்குப் பிறகு தமிழில் நல்ல சரித்திரப் படம் வெளியாகவில்லை என்றே சொல்வேன். 'மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன்' படத்தில் கூட, பாண்டியனை விடப் பளிச்சென்று தெரிந்தவர் எம்.ஜி.ஆர். அவர்கள்தாம். எனவே, தமிழில் ஒரு நல்ல சரித்திரப் படம் பண்ண வேண்டும் என்கிற எண்ணமும் ஆசையும் எனக்குள் முளை விட்டு வளர ஆரம்பித்தது.

இது விஷயமாக டைரக்டர் மணிரத்னம், கேமராமேன் ஸ்ரீராம் ஆகியோருடன் நான் பல சமயம் விவாதித்திருக்கிறேன். அப்படிப்பட்ட ஒரு விவாதத்தின் போதுதான், 'பொன்னியின் செல்வனைச் சினிமாவாக எடுத்தால் என்ன?' என்றார் மணிரத்னம். அதுவரை நான் பொன்னியின் செல்வனைப் படித்து ரசித்ததோடு சரி; சினிமாவாக எடுப்பது பற்றித் துளியும் சிந்தித்ததே இல்லை என்பதால், பொன்னியின் செல்வனைச் சினிமாவாக எடுப்பது சாத்தியம் தானா என்கிற கேள்வி எழுந்தது. அந்தக் கேள்விக்கான காரணங்களை ஒவ்வொன்றாக அலச ஆரம்பித்தோம். சாத்தியம்தான் என்ற முடிவுக்கு வந்தோம்.

முதலில் எங்களைப் பிரமிக்கச் செய்த விஷயம், நாவலின் நீளம். ஐந்து பாகங்களைக் கொண்ட பிரம்மாண்டமான அந்த நாவலின் கதையை எப்படி மூன்று மணி நேரச் சினிமாவுக்குள் அடைக்க முடியும்? யோசித்தோம். பேசாமல் 'காட் ஃபாதர்' படத்தைப் போல, பொன்னியின் செல்வனையும் இரண்டு பாகங்களாக வெளியிட்டு விடலாமா என்கிற யோசனையையும் பரிசீலித்தோம். அப்படி வெளியிடும் பட்சத்தில், முதல் பாகத்தை எடுத்து வெளியிட்ட பிறகு, இரண்டாம் பாகத்தை எடுத்து வெளியிடுவதா அல்லது இரண்டு பாகங்களையும் ஒரேயடியாகத் தயாரித்து முடித்து விட்டு இரண்டையும் ஒரே சமயத்தில் வெளியிடுவதா? எந்த பாகத்தில் எதையெதைச் சொல்வது? இவற்றையெல்லாம் தீவிரமாக விவாதித்துக் கடைசியில் ஒரே திரைப்படமாய் எடுப்பதுதான் நல்லது என்று முடிவெடுத்தோம்.

இரண்டாவதாகக் காட்சிகளின் அமைப்பு. நாவலில் எழுதப்பட்டுள்ள நான்கைந்து பக்க வர்ணனைகளைக் கூட, படமாக எடுக்கும் போது, சில விநாடிகளில் காட்டி விடலாம் என்பது ஓர் அனுகூலம் என்றால், கதாபாத்திரங்களின் மன உணர்வுகளை எழுத்தில் கொண்டு வரப்பட்டுள்ளதைப் போல, திரையில் முழுமையாகக் கொண்டு வந்து விட முடியுமா என்பது சிக்கலானதொரு விஷயம்!

அதே போல, 'பாய்மரக் கப்பலில் மின்னல் வெட்டியது...' என்று ஒரு காட்சியை மிகச் சுலபமாக எழுத்தில் கொண்டு வந்து விட்டார் கல்கி. ஆனால், அதை அப்படியே திரையில் காட்ட வேண்டுமானால், மேலை நாட்டு நிபுணர்களை வரவழைத்து, தந்திரக் காட்சிகள், ஸ்பெஷல் எஃபக்ட்கள் எல்லாம் அமைக்க வேண்டும். அப்போதுதான் அந்த வரியைத் திரையில் காட்சியாக்க முடியும்.

கம்ப்யூட்டர் யுகத்திலுள்ள ரசிகர்களைக் கதை நடந்த அந்த சரித்திர காலத்திற்குக் கொண்டு செல்ல வேண்டும். அதற்காகத் தொல்பொருள் ஆய்வுத் துறையினருடனும் விரிவாகப் பேசி விவாதித்தேன். சரித்திர காலத்துக்கு ஒவ்வாத மாதிரி நம்மையறியாமலே தவறிப் போய் ஏதாவது அபத்தம்















புகுந்து விடக் கூடும் என்பதால் மிகவும் எச்சரிக்கையாகப் படம் எடுக்க வேண்டிய அவசியத்தை அவர்கள் வலியுறுத்தினார்கள்!

மூன்றாவதாகக் கல்கி தமது பொன்னியின் செல்வனில் படைத்துள்ள கதாபாத்தி



கான்ஸ்டபிள்: சார்... ஒரு குட் நியூஸ்!

இன்ஸ்பெக்டர்: என்னது?

கான்ஸ்டபிள்: பிளேடு பக்கிரி நமக்கு ஒரு மாச மாமூலைத் தீபாவளி போனசாத் தர்றேன்னு சொல்லியிருக்கான்!

— வி. ஜி. குமார்.

ரங்கள். ஏராளமான பாத்திரங்கள். எல்லாவற்றையும் ஏதாவதொரு விதத்தில் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்திருக்கும் விதத்தில் அமைத்திருக்கிறார் கல்கி. எனவே, இன்ன பாத்திரம் அத்தனை முக்கியத்துவம் வாய்ந்ததில்லை என்று எதையுமே ஒதுக்கி விட முடியாத சூழ்நிலை. இதையும் விவாதித்தோம்.

**நா**ன்காவதாக லொக்கேஷன். செயற்கையாய் 'செட்'கள் அமைத்துப் படம் எடுப்பதில் எனக்குத் துளியும் உடன்பாடில்லை. எனவே, பொன்னியின் செல்வன் கதை நடந்ததாக எழுதப்பட்டுள்ள இடங்களுக்கே சென்று, அவசியமெனில் அங்கங்கே 'செட்'களை நிறுவி எடுப்பது தான் சிறப்பானதாக இருக்கும் என்று முடிவு செய்திருக்கிறோம்.

இதற்கெல்லாம் சுமார் இரண்டு கோடி ரூபாய் செலவாகும் என்று நினைக்கிறேன். இது சரியாகத் திட்டமிட்டுச் செலவிடும் போதுதான். இல்லையெனில் இதுவே மூன்று மடங்கு அதிகரிக்கும் அபாயமும் இருக்கிறது! இதனால்தானோ என்னவோ, 'ராமாயணம், மகாபாரதம் போல, டி.வி. தொடராகப் பொன்னியன் செல்வனை எடுக்கக் கூடாதா?' என்றும் சிலர் கேட்கிறார்கள். என்னைப் பொறுத்தவரை பொன்னியின் செல்வனை எனது சொந்தத் தயாரிப்பில் திரைப்படமாக எடுப்பதையே விரும்புகிறேன்.

**க**டைசியாக நடிக — நடிகையர்கள். கதையில் வரும் ஒவ்வொரு பெண் கதாபாத்திரத்தையும் அத்தனை அழகாகப் படைத்திருக்கிறார் கல்கி. அவற்றுக்குப் பிரபலமான நடிகைகளைப் போட்டால் அவர்களுடைய 'இமேஜ்' அந்தந்தப் பாத்திரங்களின் தன்மையைப் பின்னுக்குத் தள்ளிவிடும் அபாயமும் இருக்கிறது. எனவே, அழகான புதுமுகங்களைத்தான் தேட வேண்டும். சில விளம்பரங்களில் தென்படும் சில முகங்கள் பளிச்சென்று பொன்னியின் செல்வனின் சில பாத்திரங்களுக்குப் பொருத்தமாய் இருப்பதாகப் படுகிறது. அவர்களைப் பயன்படுத்திக் கொள்ள நினைக்கிறேன்.

திரையுலகில் உள்ள எனது நண்பர்கள் பலரும் எனது இந்த முயற்சிக்கு மிகுந்த உற்சாகமூட்டுகிறார்கள். சத்யராஜ், பிரபு போன்றவர்களெல்லாம் நான் சொல்கிற பாத்திரத்தில் நடிப்பதற்குத் தயாராய் இருக்கிறார்கள். இளையராஜாவும் பொன்னியின் செல்வனுக்காகப் பிரத்யேக முயற்சி எடுத்துக் கொண்டு இசையமைத்துக் கொடுப்பார். நான் சொன்னால் போதும் எந்த வேலையையும் நிறுத்தி வைத்து விட்டுப் டொன்னியின் செல்வனைப் படமாக்க வந்து விடுவார் கேமராமேன் ஸ்ரீராம். இப் படத்தை இயக்குவதற்கான சரியான டைரக்டர் மணிரத்னம்தான் என்பது எனது கணிப்பு.

வந்தியத்தேவனாக யார் நடிப்பது என்பதை நான் சொல்லவே தேவையில்லை; நீங்களே இந் நேரம் புரிந்து கொண்டிருப்பீர்கள்.

'எல்லாம் சரி, படப்பிடிப்பு எப்போது ஆரம்பம்?' என்று கேட்கிறீர்களா? ஐந்து பாகங்களையும் ஒருங்கிணைத்துச் சுருக்கி திரைக் கதையாக்கும் பணிதான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. திரைக்கதை — வசனம் தயாரானதும் பொன்னியின் செல்வனின் தீவிர வாசகர்கள் சிலரிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லி, ஸ்கிரிப்ட் முழுமையானதாக — திருப்திகரமானதாக இருக்கிறதா என்று கருத்துக் கேட்டு அறியவிருக்கிறேன். தேவையெனில் அவர்கள் கருத்துப்படி சில மாறுதல்களையும் செய்வேன். அதன் பிறகுதான் படப்பிடிப்பு துவங்கும்.

எப்படி, ஒவ்வொரு வாசகரையும் கவரும் படியாகக் கல்கி பொன்னியின் செல்வனை எழுதினாரோ, அப்படி பார்க்கும் ஒவ்வொருவரும் பாராட்டும்படியாக அதைப் படமாக்க வேண்டும் என்பதே எனது ஆசை, லட்சியம், கனவு... எல்லாமே!.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படமும், படமும்:
**யோகா**

# நாடாளுமன்றத் தேர்தல் —தமிழக நிலவரம்!

தேர்தலை அறிவித்து விட்டார் ராஜீவ். மூப்பனார் பிரதமரைச் சந்தித்த போது, 'அ. தி. மு. க. கூட்டுக்கு ஒத்துப் போக வேண்டும்' என்று பிரதமர் கேட்டுக் கொள்ள, 'இப்போது எம். பிக்களாக இருக்கும் என் ஆதரவாளர்களுக்கு டிக்கெட் கொடுக்கும் பட்சத்தில், நீங்கள் யாருடன் வேண்டுமானாலும் கூட்டு வைத்துக் கொள்ளுங்கள்' என்று கூறிவிட்டு வந்து விட்டாராம் மூப்பனார். மொத்தம் உள்ள நாற்பது தொகுதிகளில் (பாண்டிச்சேரி உட்பட) 26 முதல் 30 தொகுதிகளில் இ. காங்கிரஸ் போட்டியிடும். மூப்பனார் ஆதரவாளர்களுக்கும் வாழப்பாடி ஆதரவாளர்களுக்கும் ஸீட்கள் பகிர்ந்து அளிக்கப்படும்!

ஜூனியர் அமைச்சர்களான சிதம்பரம், அருணாசலம், பிரபு ஆகியோர் சென்ற தேர்தலில் வென்ற இடத்திலேயே போட்டியிட இருக்கிறார்களாம். வாழப்பாடி ராமமூர்த்தி கிருஷ்ணகிரி தொகுதியில் போட்டியிடவில்லை என்றால், அந்தத் தொகுதியில் தங்கபாலு நிற்கக் கூடும் என்று சொல்லப் படுகிறது. மதுரையில், மறைந்த ஏ. ஜி. சுப்பராமனின் மகனுக்கு ஸீட் கொடுக்கப் படலாம். ஸ்ரீபெரும்புதூரில் மரகதம் அம்மாளின் மகள் லதா பிரியகுமார் போட்டியிடுவார் என்றும் எதிர்பார்க்கப் படுகிறது.

ஜெயலலிதாவைப் பொறுத்தவரை, மிச்சமிருக்கும் 10 — 14 தொகுதிகளில் பெரும்பான்மைத் தொகுதிகளைத் தம் தோழமைக் கட்சிகளுக்குப் பகிர்ந்து கொடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறார். முக்கியமாக, பாட்டாளிகள் மக்கள் கட்சி (ராமதாஸ் கட்சி) திண்டிவனம், சிதம்பரம், வந்தவாசி தொகுதிகளைக் கேட்கிறது. தா. பாண்டியன் தலைமையில் உள்ள இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி திருச்சி, கோயமுத்தூர் தொகுதிகளையும், அப்துஸ் சமதின் முஸ்லிம் லீக் திருப்பத்தூர் தொகுதியையும் கேட்கிறது. அ. தி. மு. க. தலைவர்களில் ஹண்டே (மத்திய சென்னை) எஸ். டி. எஸ். (தஞ்சை) ஆகியோர் போட்டியிடலாம். கருப்பசாமிப் பாண்டியன் நெல்லையிலிருந்து போட்டியிடலாம்.

தி. மு. க. வும் தயார் நிலையில்தான் இருக்கிறது. நாகப்பட்டினம், தென்காசி, மதுரை, கோவை தொகுதிகள் சி. பி. எம். முக்குக் கொடுக்கப்பட்டுள்ளனவாம். ப. மாணிக்கம் தலைமையிலான கம்யூனிஸ்ட் கட்சிக்குத் திருச்சியும், லத்தீப் முஸ்லிம் லீக்கிற்குத் திருப்பத்தூரும் கொடுக்கப்பட்டுள்ளனவாம். ஜனதா தளத்தின் சார்பில் இன்னும் பேச்சு வார்த்தை ஆரம்பிக்கப் படாவிட்டாலும் நாகர் கோயில், தென் சென்னை, திண்டிவனம், மாயவரம், கோபிச் செட்டிபாளையம் ஆகியவை ஜனதா தளத்துக்குக் கொடுக்கப்படலாம். சந்தடி சாக்








# கல்கி வாசகர்களுக்குத் தீபாவளிப் பரிசு!

நீங்கள் நீண்ட நாட்களாக ஏதாவது ஒரு பொருளை வாங்க வேண்டும் என்று கனவு கண்டு வந்திருப்பீர்கள். உங்களைச் சொக்க வைக்கும் ஓர் ஆடியோ கேஸட், உங்களுக்குப் பிடித்த கதாசிரியரின் ஒரு புத்தகம், ஒரு நல்ல பவுண்டன் பேனா —

எதிர்பாராத வேறு செலவினங்கள் வந்து நீங்கள் ஆசைப்பட்ட அந்தப் பொருளை வாங்கக் கை வராமலே போயிருக்கலாம்.

இந்த இதழின் தலையங்கப் பக்கத்தில் மேற்புறம் தேதிப் பகுதியைக் கவனியுங்கள். அங்கு தீபாவளிப் பரிசு முத்திரை பதித்து, ரூ. 25, ரூ. 50, ரூ. 100 என்று பரிசுத் தொகை குறிப்பிட்டு, கல்கி ஆசிரியரின் கையெழுத்தும் இருக்கிறதா, பாருங்கள். அவ்வாறிருக்குமானால் அந்தப் பக்கத்தின் அம் மேல் பகுதியை மட்டும் கத்தரித்து எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். இதனை, நீங்கள் நெடு நாட்களாக ஆசைப்பட்டு வாங்க முடியாமல் தள்ளிக் கொண்டு போன பொருளை வாங்கியதற்கு உரிய — தேதியுடன் கூடிய — பில்லுடன் இணைத்து அனுப்பினால் கூப்பனில் குறிப்பிடப்பட்டுள்ள தொகை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கப்படும். கூப்பன் கிடைத்ததும் அதன் மதிப்புக்குக் கைமாற்றுப் பெற்றுக் கூட அப் பொருளை நீங்கள் வாங்கி விடலாமே? கூப்பனின் மதிப்புக்கு மேல் கைப்பணம் செலவழித்தும் நீங்கள் ஒரு பொருளை வாங்கலாம்; ஆட்சேபணை ஏது?

ஒரே ஒரு நிபந்தனை! நீங்கள் வெகு நாட்களாக வாங்க விருப்பப்பட்டு வந்த அந்தப் பொருள் என்ன? அதன் மீது உங்களுக்குப் பற்றுதல் விழக் காரணம் என்ன? அந்தப் பின்னணியைச் சுருக்கமாகவும் சுவையாகவும் (நகைச்சுவையாகவும்!) எங்களுக்கு எழுதி அனுப்ப வேண்டும்! இவற்றுள் பிரசுரத்துக்கு ஏற்கப்படும் துணுக்குகள் ஒவ்வொன்றுக்கும் தனியே ரூ 25/— பரிசு உண்டு!

**முடிவு தேதி: நவம்பர் 15, 1989.**

இந்தத் தேதிக்குப் பிறகு வரும் அனுபவக் குறிப்புக்கள், கூப்பன்கள் முதலியன பரிசு பெற மாட்டா. **கல்கி விற்பனையாளர்கள் பங்கேற்கக் கூடாது.**

**— ஆசிரியர்.**

---

கில் சிவாஜி கணேசன் சிவகங்கைத் தொகுதியைக் கேட்கிறாராம். தென் சென்னையில் முன்னாள் வெளியுறவுத் துறைச் செயலர் வெங்கடேஸ்வரன் நிற்கவிருக்கிறார். 'ஹிந்து' ராமையும் இழுத்துப் போட என். வி. என். சோமு மூலமாக வேலை நடக்கிறதாம்!

எவ்வளவுக்கு எவ்வளவு தொகுதிகளைத் தோழமைக் கட்சிகளுக்குத் தள்ளிவிட முடியுமோ அந்த அளவுக்குத் தள்ளிவிடத் தயாராக இருக்கிறார் கருணாநிதி. காரணத்தைத் தி. மு. க. வட்டாரத்தில் விசாரித்த போது, பாராளுமன்றத் தேர்தலில் கட்சி ஆட்கள் நிற்பதற்குத் தயங்குகிறார்கள் என்று தெரிய வந்தது. ரேஷன் பிரச்னை, பஸ் கட்டண உயர்வு, அரிசி விலை உயர்வு போன்ற பல விஷயங்கள் தி. மு. க. வுக்குத் தேர்தலில் தலைவலியைக் கொடுக்கும் என்று கட்சிக் காரர்களே பயப்படுகிறார்கள்.

தி. மு. க. வட்டாரத்தில் மிகவும் உன்னிப் பாகப் போட்ட கணக்கின்படி, பன்னிரண்டு தொகுதிகளில் தி. மு. க. வெற்றி பெறலாம் என்று தெரிய வந்ததாம். தி. மு. க. சார்பில் லிஸ்ட் தயார்.



அ. தி. மு. க. வில் இருந்து விலகி நிற்கும் கண்ணனுக்கு சேலம் தொகுதியில் தி. மு. க. ஆதரவு கொடுக்கும். அதே போல் திருச்செந்தூர்த் தொகுதியில் நிற்க விரும்பும் பி. எச். பாண்டியனும் தி. மு. க. ஆதரவைக் கோருகிறார்.

ஸ்டாலின் தம் ஆட்களைத் திணிக்க முயற்சி செய்கிறாராம். அதை எதிர்ப்பவர்கள் முரசொலி மாறன் மற்றும் அன்பழகன் என்கிறார்கள்!

**— கௌசல்யா.**

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**ஏனெனில், காம்ப்ளான், குழந்தைகளுக்கு அன்றாடம் தேவைப்படும் அத்யாவசிய ஊட்டச்சத்தை வழங்குகிறது.**

குழந்தைகளின் வளர்ச்சிப் பருவம் சாதாரணமாக 15 அல்லது 16 வயதிலே நிறைவு பெறுகிறது. இந்த வளர்ச்சிக்கு அடிப்படையான ஊட்டச்சத்து புரதமாகும். ஆகவே, உங்கள் குழந்தைகளுக்கு இப்போது காம்ப்ளான் மிகமிக அவசியம். புரதச் சத்துக்களிலேயே தலைசிறந்த பால்-புரதம் (20%) கொண்டது காம்ப்ளான். மேலும் 22 ஆகார உணவுச்சத்துக்களும் காம்ப்ளானில் உள்ளன.

குழந்தைகள் ஆசையோடு கேட்டு அருந்தும் சுவைகளில் கிடைக்கிறது காம்ப்ளான்.




23
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்
பால் சேர்க்கத் தேவையில்லை.

**காம்ப்ளான்®**

GX/62/203 TAM

## திட்டமிட்ட பரிபூரண உணவு

# கஸ்தூரி–ராம் மோதல் ராஜீவுக்கு வெற்றி!

**போஃபர்ஸ் விஷயத்திலே ஒரு கிளைக் கதையாக 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியர் ஜி. கஸ்தூரி, இணை ஆசிரியர் ராம் ஆகிய இருவரும் மோதிக் கொள்ளும்படி ஆகி விட்டது. இதுபற்றி முதுபெரும் பத்திரிகையாளரும் 'இல்லஸ்டிரேடட் வீக்லி'யின் முன்னாள் ஆசிரியருமான ஏ. எஸ். ராமன் கருத்துத் தெரிவிக்கிறார்:**

"பாரம்பரியம் மிக்க இந்து பத்திரிகையில் இதுபோன்ற ஒரு சம்பவம் நடந்தது எனக்கு அதிர்ச்சியை அளித்தது. இது தவிர்த்திருக்கப்பட வேண்டிய ஒன்று.

என்னைப் பொறுத்தவரை ஆசிரியர் கஸ்தூரி ஒரு "கன்சர்வேடிவ் ஜர்னலிஸ்ட்"; ராம் ஒரு 'கமிட்டட் ஜர்னலிஸ்ட்'. அதனால் தான் பிரச்னையே!

போஃபர்ஸ் விவகாரத்தை அம்பலப்படுத்துவதில் ஹிந்துவின் பணி மகத்தானது. பீரங்கி பேரம் சம்பந்தமான ஆவணங்கள், கண்ணியத்துக்குப் பெயர் பெற்ற ஹிந்துவில் அல்லாது வேறு எந்தப் பத்திரிகையில் வெளியாகி இருந்தாலும், இந்த அளவுக்கு மக்களிடையேயும், அரசியலிலும் ஒரு பாதிப்பையும், பரபரப்பையும் அது ஏற்படுத்தியிருக்காது. இதனால், பயந்து போன அரசாங்கம், மேற்கொண்டு, ஆவணங்கள் எதுவும் ஹிந்துவில் வெளியிடப்படாமல் இருக்கப் பல வழிகளிலும் முயன்றது. அந்த அச்சுறுத்தல்களுக்குப் பயந்து கொண்டுதான், வெளியிடுவதற்குத் தயாராய் இருந்த இரண்டாம் தவணை ஆவணங்கள் வெளியிடப்படாமல் நிறுத்தப்பட்டன என்று நான் கருதுகிறேன். ஆங்கில ஏகாதிபத்தியத்தையே தீரமுடன் எதிர்த்த ஹிந்து, இன்றைய ஆட்சியாளர்களுக்குப் பயந்து விட்டது என்பது மிகவும் வருத்தப்பட வேண்டிய விஷயம். ஹிந்துவில் நிறுத்தப்பட்டு, ராம் மற்ற பத்திரிகைகளுக்குக் கொடுத்த இரண்டாம் தவணை ஆவணங்களை நான் கருத்தூன்றிப் படித்தேன். 'புதிதாய் ஒன்றுமில்லை' என்கிற கஸ்தூரியின் வாதம் அர்த்தமற்றது. அதில் புதிய விஷயங்கள் பல இருக்கின்றன. போஃபர்ஸ் விஷயத்தில் ராமும், சித்ரா சுப்ரமணியமும் புலனாய்வு செய்து கொண்டு வந்த விஷயங்களைப் போட ஆரம்பித்துவிட்டுத் திடீரெனப் பாதியில் நிறுத்துவது நியாயமற்றது.

அதேசமயம், ஒரு பத்திரிகையின் ஆசிரியரை எதிர்த்து, இணை ஆசிரியர் அறிக்கை விடுவது என்பது பத்திரிகை

ஏ. எஸ். ராமன்

தர்மம் இல்லை. வேறு ஏதாவது ஒரு பத்திரிகையில் இதே போன்றதொரு மோதல் ஏற்பட்டிருந்தால், நிர்வாகத்தின் ஆதரவு யாருக்கு இருக்கிறது என்பதைப் பொறுத்து, இருவரில் ஒருவர் ராஜினாமா செய்து விட்டிருப்பார். ஆனால் கஸ்தூரி – ராம் விஷயம் மிகவும் வித்தியாசமானது. இரண்டு பேருமே பத்திரிகையின் பங்குதாரர்கள். எனவே இந்த விஷயத்தை அவர்கள் விவா

இத்துச் சமாதானமாய்ப் போயிருக்க வேண்டும்.

இப்போது என்ன ஆயிற்று? பல வழிகளிலும் முயன்று தோற்று விட்டதால், முடிவில் பிரித்தாளும் சூழ்ச்சி மூலம், கஸ்தூரி — ராம் இருவருக்குள்ளும் மோதலை ஏற்படுத்தி, ராஜீவ் காந்தி வெற்றி பெற்று விட்டார்!''

சந்திப்பு: **மௌஷ்மி**

* கஸ்தூரி



# ராம்

●● இந்து பத்திரிகையில் இப்போது இரண்டாவது இன்னிங்ஸ். 1968 — இல் சேர்ந்தவர், 1970 — இல் நிர்வாகம் — தொழிலாளர் பிரச்னையில் தொழிலாளர் சார்பாக ராஜினாமா செய்தார். அப்போது ஹிந்து ஆசிரியர் ஜி. நரசிம்மன். ராமின் தந்தை.

●● கிரிக்கெட்டில் மிகுந்த ஈடுபாடு. பள்ளியில் படிக்கும் போது ராமகிருஷ்ணா மிஷன் கிரவுண்டில் ஒரு மாட்சில் பத்து விக்கெட்கள் அடித்தவர்! 'அந்த கிரவுண்டில் இந்த ரிகார்டை இதுவரை யாரும் மிஞ்சவில்லை' என்கிறார்! ரஞ்சி டிராஃபியிலும் ஆடியிருக்கிறார்.

●● லயோலா, பிரஸிடென்ஸி, பிறகு அமெரிக்காவில் கொலம்பியா பல்கலைக் கழகத்தில் பத்திரிகை இயல் படிப்பு. அப்போது வியட்நாம் யுத்தம் நடக்க, அதனால் உருவான அமெரிக்க மக்களின் கொந்தளிப்பை நேரடியாக உணர்ந்தவர். இந்தியா திரும்பும் போது, இடதுசாரி மனப்பான்மையுடன் வந்தார். ஜோதிபாசுவை ரொம்பப் பிடிக்கும்.

●● மனைவி ஸூஸன் இங்கிலாந்தைச் சேர்ந்தவர். தம்பம் பள்ளத்தாக்கு பற்றி ஆராய்ச்சி செய்ய இந்தியா வந்தவர். சுயமரியாதைத் திருமணம் — பெற்றோர் சம்மதத்துடன்.

●● ''கடவுள் இருக்கிறாரோ இல்லையோ, எனக்கு நம்பிக்கை கிடையாது'' என்பவர் ராம்.

●● எமர்ஜென்ஸி சமயம் அரசுக்கு எதிரான ரகசிய இயக்கங்களில் பங்கு பற்றியவர்.



* ராம்

●● கேள்வி: ''ஹிந்துவை விட்டு விலகுவீர்களா?''

பதில்: ''நான் விலகினால் அது 'அவர்கள்' வெற்றியாகிவிடும்; அதனால் உள்ளிருந்தபடியே போராடுவேன்!''

கேள்வி: ''தேர்தலில் போட்டியிடுவீர்களா?''

பதில்: ''என் சுபாவத்துக்கும் அரசியலுக்கும் ஒத்து வராது. என்றுமே, எந்தக் கட்சியிலுமே சேர மாட்டேன். தேர்தலிலும் நிற்க மாட்டேன்!''

●● ராம், வீட்டில் பதினைந்துக்கும் அதிகமான நாய்களை வளர்க்கிறார்.

சந்திப்பு: **ப்ரியன்**





குற்றவாளி செய்திருக்கும் பல குற்றங்களுக்காக கடுமையான தண்டனை விதிக்க கனம் நீதிபதி அவர்களை வேண்டுகிறேன்.
தேர்தல்





தேர்தல் வெற்றிக்கு உங்களைத் தான் நம்பியிருக்கோம்!
உங்க ராஜீவ் நவம்பர் ௨ந்தேதி வரை தமிழ் நாட்டுக்கு அரிசி, சக்கரை பாமாயில் இதுமாதிரி இடைபரியாகவே கொடுத்து வரப் பாத்துக்குங்க!



தமிழக அரசு விவசாயிகளுக்கு மின் கட்டண சலுகை அளித்துள்ளது.



# கல்கி

1989 அக்டோபர் 29
மலர் 48 இதழ் 13
சுக்ல ஐப்பசி 13



## தேர்தல் அறிவிப்பு: ராஜீவுக்குத் தோல்வி!

ஜனவரியில் நடக்க வேண்டிய நாடாளுமன்றத் தேர்தல், நவம்பரிலேயே நடக்குமென்று பிரதமர் அறிவித்திருப்பதானது, "எதிர்க்கட்சிகளுக்குக் கிடைத்த முதல் வெற்றி" என்று கருணாநிதி வர்ணித்திருக்கிறார். அதில் ஒரு சிறு திருத்தம்: முதல் வெற்றி என்பது மாநிலங்கள் அவையில் பஞ்சாயத்து ராஜ், நகர் பாலிகா மசோதாக்களைச் சட்டமாக நிறைவேற்ற முடியாமல் முறியடித்ததாகும். அதன் பின்விளைவாக உருவான இரண்டாவது வெற்றியே தேர்தல் அறிவிப்பு. மூன்றாவதாகத் தேர்தல் வெற்றியையும் எதிர்க்கட்சிகள் அடைந்தே தீர வேண்டும். அதற்கேற்ப அவர்கள் அடிப்படைக் கொள்கைகள் பலவற்றை வகுத்து, மக்கள் முன் வைப்பதுடன், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்துத் தொகுதி உடன்பாடு கண்டு, வோட்டுக்கள் சிதறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இப்படி விட்டுக் கொடுத்துப் போகவில்லையானால் அவர்கள் இந்நாட்டு மக்களைக் கைவிட்டவர்களாவார்கள்.

ரதகஜதுரக பதாதிகளுடன் தேர்தல் களத்தில் இறங்கியிருக்கிறார் ராஜீவ். 1. டி.வி. — ரேடியோ என்ற ஏகபோக்கியப் பிரசார பலம். 2. தவறான வழிகளில் வந்து சேர்ந்த அபரிமித பண பலம். 3. தமது கட்டுப்பாட்டில் உள்ள அரசு யந்திரத்தைப் பயன்படுத்திக் கொள்கிற அதிகார துஷ்பிரயோகம். 4. மோசடிக்கு உதவக் கூடிய எலெக்ட்ரானிக் வோட்டுப் பெட்டிகளும் பொய்யான வாக்குறுதிகளும் — ஆக மொத்தம் நால்வகைப் படைகள்!

பஞ்சாயத்து ராஜ், நகர் பாலிகா மசோதாக்களை மாநிலங்கள் அவையில் தோற்கடித்துக் காட்டிய எதிர்க்கட்சிகளை "மக்கள் விரோதிகள்" என வர்ணிக்கும் பொய்ப் பிரசாரமும் தொடரும்!

இந்திரா காந்திக்குப் பிறகு ராஜீவ் காந்தி பதவிக்கு வந்ததும் இங்கே பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடும் என்று யாரும் கனவு காணவில்லை. ஆனால் குறைந்தபட்சம் நிர்வாகம் தூய்மை அடையும் என்றும், மக்களின் உழைப்பார்வத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் விதமாக நாட்டில் வேலை வாய்ப்புக்கள் பெருகும் என்றும், விலைவாசிகளை ஸ்திரப்படுத்தத் தேவையான நடவடிக்கைகளை எடுப்பார் என்றும் நம்பினோம். ஆனால் இந்தக் குறைந்தபட்ச எதிர்பார்ப்புக்களில் கூட ஏமாற்றமே அடைந்தோம்.

பஞ்சாப், அஸ்ஸாம், இலங்கை போன்ற எந்தப் பிரச்னையிலும் ராஜீவ் காந்தி வெற்றி காணும் விதமாக ராஜதந்திரத்துடன் நடந்து கொள்ளவில்லை. தொட்டதெல்லாம் தோல்வி! போதாக்குறைக்கு நாட்டில் இனக்கலவரங்களும் மதக்கலவரங்களும் நாளுக்கு நாள் அதிகரித்தே வருகின்றன. இன்னும் குறைபாடுகளை அடுக்கிக் கொண்டே போகலாம்.

ஒரு பிரதமர் திறமையற்றவராக இருந்தால் அவரை மன்னிக்கலாம். அவர் நேர்மையாளராக இருப்பின், திறமைக் குறைவுக்காக அவருக்கு வோட்டுப் போடாதவர் கூட அவரை வாழ்த்துவார்! ஆனால் ராஜீவ் உண்மைக்குப் புறம்பாகப் பேசுகிறவர் என்பது பல முறை நிரூபணமாகியிருப்பது இந்நாட்டுக்கே தலைகுனிவை ஏற்படுத்தியுள்ளது. ஹெலிகாப்டர் பேரம், எண்ணெய் பேரம், நீர்மூழ்கி பேரம் போன்ற எல்லாவற்றிலும் பயங்கர லஞ்ச ஊழல்கள் இருந்திருப்பதைப் பிரதமக் கணக்காயரின் அறிக்கைகளே எடுத்துக் காட்டுகின்றன. வேறு சாட்சியம் தேவையில்லை. போஃபர்ஸ் விஷயத்திலோ, 'யாருக்கும் கமிஷன் இல்லை'; 'பணி முடிப்புப் பணம் தரப்பட்டது, அது கமிஷன் இல்லை'; 'கமிஷன் பெற்றிருக்கலாம், ஆனால் இந்தியர் இல்லை' என்று படிப்படியாக இறங்கி வந்த ராஜீவ், கடைசியாக இப்போது, 'இந்தியருக்குக் கமிஷன் தரப்பட்டிருந்தாலும் காங்கிரஸ் கட்சிக்கோ, காங்கிரஸ்காரருக்கோ தரப்பட்டதாக நிரூபணம் இல்லையே' என்று கதறும் நிலைக்கு வந்துவிட்டார்! நாளைக்கு இன்னும் என்ன சொல்லி அழுவாரோ, தெரியாது!

லஞ்ச ஊழலையும் பொய்யையும் மக்கள் மன்னிக்கவே கூடாது. ராஜீவைப் பதவியிலிருந்து இறக்கிவிட மக்களுக்கு இதைவிடப் பெரிய காரணம் ஏதொன்றும் தேவையே இல்லை.

அடுத்த தேர்தலின் போது ராஜீவுக்கு மறுபடியும் பதவி தரலாம் — வாக்காளர்கள் விரும்பினால். ஆனால் இந்தத் தேர்தலின் போது அவரைத் தண்டித்து அனுப்பிவிட வேண்டும். இல்லையெனில் தேசத் துரோகத்துக்கு — அவருக்கு வோட்டளிக்கின்ற — வாக்காளர்களும் துணை போனதாக ஆகும்.

இந்த நாட்டின் எதிர்காலத்தைத் நிர்ணயிக்கப் போகிற இளைஞர்கள் — 18 முதல் 21 வயது வரையிலான வாக்காளர்கள் — இது பற்றிச் சிந்திக்கட்டும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# கம்ப்யூட்டருக்கு அறிவு உண்டா?




13

செயற்கை அறிவு என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் பல உள்ளன. சிலர் 'கம்ப்யூட்டராவது அறிவு பெறுவதாவது? பொம்மைப் புத்தகம் பார்த்து, இது மரம் என்று அடையாளம் காட்டும் மூன்று வயதுக் குழந்தையின் சாமர்த்தியம் கூட கம்ப்யூட்டருக்குக் கிடையாது. அதற்கு எப்படி அறிவு புகட்ட முடியும்?' என்கிறார்கள்.

சிலர் 'கம்ப்யூட்டரின் வேகத்தைப் பாருங்கள், மனித மூளையால் நூறு வருஷமானாலும் போட இயலாத கணக்கைக் கம்ப்யூட்டர் சில செகண்டுகளில் செய்கிறது. அதற்கு அறிவில்லை எனச் சொல்வது அபத்தம்' என்கிறார்கள்.

இவர்களில் யார் கட்சி ஜெயிக்கும் என்பதைப் பற்றிக் கவலைப்படாமல், செயற்கை அறிவு என்கிற இயலில், தற்போதைய ஆராய்ச்சிகளை அடுத்த நூற்றாண்டுக்கு நீட்டினால், நடக்கக் கூடியவை எவை என்பதைப் பற்றிச் சொல்லலாம்.

அதற்கு முன்னால், பதினோராம் அத்தியாய முடிவில், "'மோடம்' என்றால் என்ன?" என்ற எனது கேள்விக்கான விடையைச் சொல்லி விடுகிறேன். மோடம் (Modem) என்பது Modulator demodulator என்பதன் சுருக்கம். கம்ப்யூட்டர்கள் டெலிபோன் கம்பிகள் மூலம் தொடர்பு கொள்ள உதவும் சாதனம்.

முதலில் மருத்துவம்.

பட்டிவீரன் பட்டியில் இருக்கிறவர்களுக்குச் சென்னையில் கிடைக்கும் மருத்துவ வசதி உண்டா? இல்லை. சென்னையிலேயே பணக்காரர்களுக்கு உள்ள மருத்துவ வசதி ஏழைகளுக்கு இல்லை. கம்ப்யூட்டர் வந்து, ஒருவிதத்தில் இந்தத் தராதரங்களை நீக்க முடியும். 'எக்ஸ்பர்ட் சிஸ்டம்' என்று இதற்குப் பெயர்.

மருத்துவத்தில் பெரும்பாலும் நோய் நாடுவது என்பது ஒரு ஸ்பெஷலிஸ்டு கேட்கும் கேள்விகளுக்கு விடையளிப்பதே. இதயக் கோளாறு என்பது இடது கையில் வலி, தாடையில் வலி என்று சம்பந்தமில்லாமல் ஆரம்பிக்கிறது. அதிலிருந்து ஈஸிஜி ஸ்ட்ரெஸ்டெஸ்ட் என்று எடுத்து, ஆர்ட்டிரியோ கிராஃபி எடுத்து, ரத்தக்குழாய் சரியில்லை என்று முடிவுக்கு வருகிறார்கள். அனைத்துமே சில கேள்வி பதில்கள் சில சாதனங்களின் உதவியுடன் விற்பன்னர்களின் அனுபவமும் சேர்ந்திருக்கிறது.

உலகத்தில் மிகச் சிறந்த கார்ட்டியாலஜிஸ்ட்டு தன் அனுபவத்தை — திறமையை ஒரு கம்ப்யூட்டர் ஆணைத் தொடராக மாற்றி, அவர் கேட்கும் கேள்விகளைக் கேட்டு, அவர் சிந்தனையைச் சிந்தித்து, அவர் வரும் முடிவுக்குக் கம்ப்யூட்டரால் வர முடியும்.

ஒரு நோயின் அனைத்து அடையாளங்களையும் ஒட்டுமொத்தமாக 'ஸிண்ட்ரோம்' என்கிறார்கள். இந்த ஸிண்ட்ரோம்கள் அத்தனையையும் கம்ப்யூட்டரின் நினைவறைகளில் சேர்த்து வைத்து, 'இதுதானா இது' என்று கண்டுபிடிக்க முடியும். இதில் என்ன பயன்?

பட்டிவீரன் பட்டியிலும் இந்த உத்தம அறிவு கிடைக்கும். கம்ப்யூட்டர் கிராமத்துக்குப் போக மாட்டேன் என்று சொல்லாது. ஒரு பெரிய டாக்டர் கேஸை எடுத்துக் கொள்வதற்கு முன், சின்ன டாக்டர் ஆரம்பக் கேள்விகளையெல்லாம் கேட்டு, எக்ஸ்ரே ஈஸிஜி போன்ற படங்கள் எடுத்துத் தயாராக வைப்பதில்லையா! அந்த வேலையும் கம்ப்யூட்டரால் செய்ய முடியும். டாக்டர் கம்ப்யூட்டருக்கு விடுமுறை தேவையில்லை. அப்பாயிண்ட்மெண்ட் வேண்டாம். கிராமத்திலிருந்தே அவரை அணுகலாம்.

அடுத்தது நூலகம்.

நீங்கள் நூலகத்துக்குச் செல்லும் போது, அங்கே கிடைக்கும் புத்தகங்களைப் பட்டியலில் தேடிப் பார்த்து எடுத்துக் கொண்டு வந்து படிக்கிறீர்கள். 'தொல்காப்பியத்தின் காலம்' பற்றி நீங்கள் ஆராய்ச்சி செய்ய விரும்புகிறீர்கள் என்றால், அது பற்றி நூலகத்தில் இருக்கும் நூற்றுக்கணக்கான

சுஜாதா



* கம்ப்யூட்டருக்கு அறிவு உண்டா? — விரல் ரேகை நிபுணரின் முப்பது வருஷ அனுபவத்தை ஒரு நாளில் அடக்கி விடுகிறது கம்ப்யூட்டர். ஒரு செகண்டுக்கு 200 — லிருந்து 80,000 வரை விரல் ரேகைகளை அடையாளம் கண்டு சொல்கிறது. ஒரு லட்சத்திலிருந்து மூன்று கோடி கேடிகளின்... லாரி நபர்களின் விரல் ரேகைகளை நினைவில் வைத்துக் கொள்கிறது.

புத்தகங்களைப் படித்து, எந்த எந்த இடத்தில் காலத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறதோ, அந்த இடங்களைக் குறிப்பெடுத்துக் கொள்கிறீர்கள்.

எதிர்காலத்தில் நூலகங்களுக்கே போக வேண்டாம். புத்தகத்தையே கண்ணால் பார்க்க வேண்டாம். நூலகத்துக் கம்ப்யூட்டருடன் தொடர்பு கொண்டு, அது கேட்கும் கேள்விகளுக்குத் திரையிலேயே பதில் அளித்தால், உங்களுக்குத் தேவைப்பட்ட ஆராய்ச்சிக் குறிப்புக்கள் அனைத்தையும் அதுவே திரையில் காட்டும்; அச்சடித்தும் தரும்.

அப்படியெனில் எதிர்காலத்தில் புத்தகங்களே இருக்காதா? புத்தகங்கள் அழியா. இந்தக் காலத்திலேயே டெலிபோன் டெலக்ஸ் வந்து விட்டாலும் கடிதங்கள் அழியவில்லை. அது போலத்தான், எதிர்காலத்தில் புத்தகங்கள் வந்து கொண்டுதான் இருக்கும். ஒருவேளை எண்ணிக்கை குறைந்து, அவை கலைப்படைப்புக்களாகலாம்.

ஓர் அழகான கவிதைப் புத்தகத்தையும் அதை விருப்பமான இடத்தில் விருப்பமான பக்கத்தில் விருப்பமான வேளையில் தேர்ந்தெடுத்துப் படிக்கும் சந்தோஷத்தையும் கம்ப்யூட்டரால் ஈடுகொடுக்க முடியாது.

புத்தகங்கள் நிற்காமல் வரும். ஆனால் டெக்னாலஜியின் முன்னேற்றத்தால் தானே படித்துக் காட்டும் புத்தகங்கள் அடுத்த நூற்றாண்டின் துவக்கத்திலேயே வர சான்ஸ் இருக்கிறது. 'பொன்னியின் செல்வன்' என்று சின்னதாக டிஸ்க், அல்லது சிப் வாங்கி, அதைப் படிக்கும் சாதனத்துக்குள் இணைத்தால் ஒரு சிநேகமான குரல்... "'**கையை விடு! வானதி கையை விடு!**' என்று செவியில் அமுதென ஒலித்த இளவரசரின் குரல் கேட்டது..." என்று படித்துக் காட்டும்.

அடுத்தது கல்வி.

இப்போதே கல்வியில் டெக்னாலஜியின் தாகத்தை உணர்கிறோம். ஸாட்டிலைட் மூலமாக யு.ஜி.ஸி. அளிக்கும் பாடங்களை நீங்கள் பகல் அல்லது மாலையில் டி.வி.யில் பார்த்திருக்கலாம். இந்த அமைப்பில் இப்போது பல குறைகள் இருந்தாலும், அது ஒரு விதமான புரட்சிகரமான விஷயம் என்பதை மறுக்க முடியாது.

இந்தியத் துணைக்கண்டத்தின் எழுபது சதம் பரப்பில் தொலைக்காட்சி தெரிகிறது. வெகு சமீபத்தில் அதை யு.எச்.எஃப். அலை வரிசையில் விஸ்தரித்துத் தொண்ணூறு சதம் ஆக்கப் போகிறார்கள்.

அதன் விளைவு என்ன?

மிகவும் பிற்பட்ட கிராமத்தில் கூட இந்தப் பாடங்களைப் பார்க்க விரும்பினால் பார்க்க முடியும். இதன் சமுதாய மாற்ற சாத்தியக் கூறுகளை எண்ணிப் பாருங்கள். அடுத்த நூற்றாண்டில் இந்த வசதி, தனி மனித வசதியாகக்கூடிய சாத்தியக் கூறுகள் உள்ளன. ஒரு நூலகத்திலோ, அரசாங்கக் கட்டடத்திலோ போய் உட்கார்ந்து கொண்டு, "இன்றைக்கு என்ன பாடம்?" என்று கம்ப்யூட்டர் கேட்க,

"இயற்பியல்" என்று நீங்கள் பதிலளிக்க,

**LISP**

'லிஸ்ப்' என்றால் என்ன? என்ற சுஜாதாவின் கேள்விக்கு (8.10.89 கல்கி இதழ்) சரியான விடை அளித்தவர்கள் பலர் இருப்பினும் 6.10.89 அன்று நம் பார்வையில் பட்ட முதல் சரியான பதிலை எழுதிய சிதை. பிச்சப்பன் புத்தகப் பரிசு பெறுகிறார். இவருக்கு அமரர் கல்கி எழுதிய தியாகபூமி பரிசாக அனுப்பி வைக்கப்படுகிறது.

முகவரி:

சிதை. பிச்சப்பன்,
23, பரமேஸ்வரி நகர், முதல் தெரு,
அடையாறு, சென்னை — 20.

"இயற்பியலில் என்ன தெரிந்து கொள்ள விரும்புகிறீர்கள்?"

"ரிலேட்டிவிட்டி."

"ரிலேட்டிவிட்டியில் எது? பொதுச் சித்தாந்தமா?"

"புரியவில்லை."

"சொல்கிறேன். ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்தில்..."

இவ்வாறு கம்ப்யூட்டர் ஆசிரியன் என் பது நம் தேசங்களில் வந்து விடும். குறிப்பாக நம் தேசத்தில் திட்டங்கள் வெற்றி பெறக் கல்வி முக்கியம். போதுமான ஆசிரியர்கள் இல்லை. பல ஆசிரியர்களின் சொல்லிக் கொடுக்கும் திறமையும் சரியாக இல்லை. கம்ப்யூட்டர் வழியாகப் பாடம் சொல்லிக் கொடுத்தால், நாடெங்கும் ஒரே சீரான கல்வித்தரம் பெற முடியும்.

அடுத்தது செய்தித்தாள்கள்.

அடுத்த நூற்றாண்டின் செய்தித்தாள்கள் படிப்பவருக்குத் தகுந்த மாதிரி மாறும்.

உங்களுக்குச் சினிமாச் செய்தி அதிகம் பிடிக்குமா? உங்களுக்கு வரும் செய்தித்தாள் சினிமாவை அதிகம் கொண்டிருக்கும். அல்லது உங்களுக்கு அண்டை வீட்டு நியூஸ் தான் இஷ்டமா? செய்தித்தாள் எட்டாம் நம்பர் ராமசாமியின் மனைவி இன்று ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுத்தார். தாயும் சேயும் நலம். பன்னிரண்டாம் நம்பர் பானுமதி இன்று வீட்டைக் காலி செய்கிறார். போய் விசாரித்து விட்டு வருதல் நல்லது. என்ற 'பர்ஸனலைஸ்டு' செய்தித் தாளைப் பொதுச் செய்திகளிலிருந்து தேர்ந்தெடுத்துத் தயாரித்துக் கொடுக்கும்.

(தொடரும்)

# அமெரிக்கர் வியந்த நாட்டியம்

பதினாறு வயது நிருபமாவின் கதக் நாட்டிய நிகழ்ச்சியைக் கண்டு அமெரிக்கர்கள் வியந்து போயிருக்கிறார்கள். அதுவும் அவளுக்குக் காது கேட்காது என்பதைத் தெரிந்து கொண்ட போது எழுந்த கரவொலி அடங்க நெடுநேர மாயிற்று.

கதக் நாட்டியத்தில் துரிதகதி லயப் பிரமாணம் மிகவும் முக்கியம். தபலாவின் சொற்கோவைகள் காதில் விழ இயலாத நிலையிலும் நிருபமா லயசுத்தமாக ஆடியது அனைவரையும் பிரமிக்கச் செய்திருக்கிறது.

உடல் ஊனமுற்ற 1500 பேரின் கலை நிகழ்ச்சிகள் வாஷிங்டனில் சமீபத்தில் நடைபெற்றது. அதில் பங்கேற்க நிருபமா சென்றிருந்த போதுதான் கிடைத்தது இந்தப் பிரமாதப் பாராட்டு.

— கே.



# சஸ்பென்ஸ் விருந்தாளிகள்!

"உரத்த சிந்தனை" அமைப்பின் ஆண்டு விழாவில், 'சஸ்பென்ஸ் விருந்தாளி' என்று ஒரு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் நிகழ்ச்சிக்கு முந்தைய நாள் அவர், வர இயலாமையைத் தெரிவிக்க, அவசர அவசரமாய் வேறு ஒரு சஸ்பென்ஸ் விருந்தாளி ஏற்பாடு செய்யப்பட்டார். நிகழ்ச்சியன்று அட்ஜெஸ்ட் செய்து கொண்டு முதல் விருந்தாளியும் வந்து விட்டார்! அவசரத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட இரண்டாம் விருந்தாளியும் வந்து விட்டார்! இரண்டு பேரும், சங்க உறுப்பினர்களுடன் கலகலப்பாய்க் கலந்துரையாடினர். அவர்கள் யார்?

சஸ்பென்ஸ் உடைவது 72 ஆம் பக்கம்!

— ஜூலி.

# இலங்கைத் தெனாலி ராமன் கதைகள்...

'அந்தரே'... நம் ஊரில் கிருஷ்ணதேவ ராயர் சபையில் ஒரு தெனாலிராமன் இருந்ததுபோலவே, இலங்கை மன்னரின் சபையில் இருந்த விதூஷகன். உடல் பலம் இல்லாமல் போனாலும் புத்திமான். கர்ணபரம்பரையாய் வழங்கப்பட்டுவரும் கதைகளைத் தொகுத்துச் சந்திரிகா சோமசுந்தரம் என்கிற ஈழத் தமிழ்ப் பெண்மணி எழுதிய புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்ட சில சுவையான கதைகள் இவை:



● அந்தரே சிறுவனாக இருந்த போது, தினமும் காலையில் போய், வீட்டிற்குப் பக்கத்திலிருந்த கடையில் அப்பங்கள் வாங்கி வருவான். கடைக்காரக் கிழவி, அந்தரே சிறுவன் என்று ஏமாற்ற நினைத்து, சிறு சிறு அப்பங்களாய்ப் பார்த்துப் பொறுக்கி எடுத்துத் தருவாள். ''ஏன் சிறு அப்பங்களாய்க் கொடுக்கிறாய்?'' என அந்தரே கேட்ட போது, ''நீ சிறு பையன். சிறிய அப்பம்தான் தூக்கிக் கொண்டு போக எளிது,'' என்று பதில் சொன்னாள். அன்று அப்பம் வாங்கிக் கொண்டபின், ஐந்து ரூபாய்க்குப் பதிலாக, ஐம்பது காசு மட்டும் கொடுத்தவுடன், கிழவி, ''காசு குறைகிறதே?'' என்றாள். அதற்கு, ''வயசான உனக்கு எண்ணிப் பார்க்கச் சுலபமாய் இருக்கத்தான் குறைத்துக் காசு கொடுத்தேன்,'' என்று சொல்லியபடி நடையைக் கட்டினான் அந்தரே!

● ஒரு நாள் அரசி, அந்தரேயிடம், ''உன் மனைவியைச் சந்தித்துப் பேச ஆவலாய் இருக்கிறது; ஒரு நாள் அரண்மனைக்கு அழைத்து வா,'' என்றாள். ''அரசியே! அவளுக்குக் காது கேட்காதே!'' என்று அந்தரே சொன்னதும், ''கவலைப்படாதே! நான் அவளுடன் உரத்த குரலில் பேசுகிறேன்'' என்று அரசி கூறி விட்டாள்.

வீட்டுக்குப் போன அந்தரே, ''அரசி உன்னைப் பார்த்துப் பேச வேண்டுமாம். ஆனால் அரசிக்குக் காது சரியாய்க் கேட்காது!'' என்றதும், ''நான் உரக்கப் பேசினால் அரசி புரிந்து கொள்ளுவாரில்லையா?'' என்று கேட்டாள். ''அப்படியே செய்,'' என்றான் அந்தரே. அரண்மனைக்குச் சென்றனர் அந்தரேயும், மனைவியும். அரசியும் அந்தரேயின் மனைவியும் அருகருகே நின்று கொண்டிருந்தாலும், அபிநயத்துடன் ஒருவருக்கொருவர் உரத்த குரலில் பேசிக் கொண்டனர். அரண்மனையே இதை வேடிக்கை பார்க்கக் கூடி விட்டது. அரசரும் வந்து விட்டார். அனைவருக்குமே சிரிப்புத் தாளவில்லை. தங்கள் இருவருடைய பேச்சைக் கேட்டு எதற்காக அனைவரும் சிரிக்கிறார்கள் என முதலில் காரணம் புரியாவிட்டாலும், பின்னர் அறிந்தவுடன் இருவரும் வெட்கித் தலைகுனிந்தனர்.

முன்னர் ஒருநாள் தன் தோழியர் முன்னிலையில் அந்தரேயை அவமானப்படுத்திய அரசியையும், அன்று காலை தன்னுடன் வீண் சண்டையிட்ட தன் மனைவியையும் ஒரே சமயத்தில் பழிவாங்கி விட்ட அந்தரேயும் உள்ளூரச் சிரித்தான்!

● குடும்பத் தகராறு காரணமாய் அந்தரே, இரவு நேரம் கழித்துத் திரும்பும் போது, கதவைத் திறக்காமல், வெளியிலேயே நிறுத்தி, இரவு முழுக்கக் குளிரில் நடுங்க வைத்து விடத் திட்டமிட்டாள் அந்தரேயின் மனைவி. அதே போல, இரவு வீடு திரும்பி,





அந்தரே கதவைத் தட்ட, மனைவி திறக்க வரவில்லை. மனைவியின் தூக்கம் நிஜமில்லை; பாசாங்கு எனத் தெரிந்து கொண்ட அந்தரே, ''நீ கதவைத் திறக்கா விட்டால் நான் கிணற்றில் குதித்து விடுவேன்,'' எனப் பயமுறுத்தினான். ஆனாலும் கதவு திறக்கப்படவில்லை. ''இதோ... போகிறேன் கிணற்றில் விழ...'' என்றபடி வேகமாய்ப் போய்ப் பெரிய கல்லை எடுத்துக் கிணற்றில் போட, பெரிய சப்தம் கேட்டது. சப்தத்தைக் கேட்ட அந்தரேயின் மனைவி திடுக்கிட்டு, ''ஐயோ! கிணற்றில் விழுந்து விட்டீர்களா?'' என்று அலறியபடி கதவைத் திறந்து கொண்டு வெளியே ஓடி வர, தயாராய்க் காத்துக் கொண்டிருந்த அந்தரே, சட்டென வீட்டுக்குள் போய், கதவைத் தாழ் போட்டுக் கொண்டு விட்டான்!

● எந்த உணவு கொடுத்தாலும், ''இது எனக்கு மிகவும் பிடித்ததாயிற்றே'' என்று சொல்லிச் சாப்பிடுவது அந்தரேயின் பழக்கம். அந்தரேக்கு நல்லதொரு பாடம் கற்பிக்க எண்ணிய அரசர், அந்தரேயை விருந்துக்கு அழைத்தார். விருந்தில் பறிமாறப்பட்ட ஒவ்வொன்றையும் தன் வழக்கப்படி, ''எனக்கு மிகவும் பிடித்தது.'' என்று சொல்லிக் கொண்டே அந்தரே சாப்பிட்டான். விருந்தின் முடிவில், மிளகாய்த் தூள் மிக அதிகமாய்ச் சேர்த்துச் சமைத்த மீன் கறியைப் பரிமாறினர். அதைச் சாப்பிடு கையில், அந்தரேக்கு வியர்த்தது; நாக்கு துடித்தது; மூக்கிலும், கண்களிலும் நீர் வந்தது. ஆனாலும் அந்தரே ஒன்றும் சொல்லாமல் சாப்பிட்டு முடித்தான்.

''அந்தரே! ஏன் கண்ணீர் வடிக்கிறாய்?'' என்று கேட்டார் மன்னர்.

''என் தாய் தினமும் எனக்கு இப்படித் தான் காரமான மீன் கறி சமைத்துப் போடுவார். இப்போதும் இறந்து போன அவர் நினைவு எனக்கு வந்து விட்டது. அதுதான் கண்களில் கண்ணீர்'' என்றதும் அரசர் வாயடைத்துப் போனார்.

● அந்தரே அரசரையே பழிவாங்க முடிவு செய்தான். அரசருக்குச் சொந்தமான வயலில் நெல் அறுவடை ஆரம்பமாகியது. அப்போது சூடு மிதித்து, வைக்கோலையும், நெல்லையும் பிரிக்கக் காளைகள் தேவைப் பட்டன. அரசர், அந்தரேயைக் கூப்பிட்டு, ''நூறு காளைகளுக்குச் சொல்லி விடு'' என்று சொல்லி விட்டார். மறுநாள் காலை, மன்னரும், மற்றவர்களும் காளைகளுக்காகக் காத்திருந்தனர். ஆனால், காளைகளோ ஒன்று கூட வரவில்லை. அரசர், அந்தரேயை அழைத்து, ''காளைகளுக்குச் சொன்னாயா?'' என்று கேட்டார். அந்தரே, ''ஓ! சொல்லி விட்டேனே!'' என்றார். ''அப்புறம் ஏன் வரவில்லை?'' என்று கேட்டார் அரசர். அதற்கு அந்தரே, ''நானே நேரே போய்க் காலையில் வந்து விட வேண்டும் என்று காளைகளுக்குச் சொல்லி விட்டு வந்தேன். அவை கூட வருவதாய்த் தலையையும், காதுகளையும் ஆட்டிச் சம்மதித்தன. ஆனாலும் தெரியவில்லை... ஏனோ வரவில்லையே!'' என்றதும், அரசரின் கண்கள் சிவந்தன.

**நன்றி: இலங்கை தெனாலி ராமன் கதைகள்.**

**வெளியீடு: அநுராகம், 10, கண்ணதாசன் சாலை, சென்னை — 17. விலை ரூ. 2.50.**

தொகுப்பு: **மௌஷ்மி**



''டாக்டர் போலி போலிருக்கு...''

''எதனால அப்படிச் சொல்றே...?''

''இரும்புச் சத்து நிறைந்த டானிக் கொடுங்கன்னதுக்கு, 'சேலம் இரும்பா, டாடா இரும்பா?'ன்னு திருப்பிக் கேட்கிறார்!''

— மஞ்சுதேவன்

# உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது: பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/TSL/3112/TAM

# வல்லமை தாராயோ?

1

பட்டுக்கோட்டை பிரபாகர்

பூமியின் தாகம் இன்னும் தீர்ந்தபாடில்லை. அதை உணர்ந்ததாக, ராத்திரித் துவங்கிய மழை சீற்றமாக, சமாதானமாக மாறி மாறிப் பெய்து, விடிந்து வெகு நேரமாகியும் சூரியனை அனுமதிக்காமல் இப்போதும் சிலுசிலுவென்று ஈரத் துண்டை உதறின மாதிரி நீர்த்துளிகளைச் சிந்திக் கொண்டிருந்தது. எல்லோர் வீட்டிலும் கடிகாரங்கள் தொலைந்து போயிருந்தால் ஏழு மணிக்கு மேல் எவரும் நம்ப மாட்டார்கள். ஆனால் தொலையாமல் இருந்து மணி ஒன்பது என்று காட்டுவதால் பள்ளிக்கூடம், அலுவலகம் என்று குடை பிடித்துக் கொண்டு புறப்பட்டிருந்தார்கள்.

ஸ்கூட்டர்காரர்களில் சிலர் ரெயின் கோட் அணிந்து கடந்தார்கள். பஸ்களும், கார்களும் வைப்பர்களை ஓட்டிக் கொண்டு சாலையின் பழுப்பு நீரைப் பிளாட்பாரம் வரைக்கும் சிதறடித்துக் கொண்டு சீறின. 'களக், களக்' என்று சாலையோரங்களில் தண்ணீர் வடிந்து கொண்டிருக்க, சுவர்களில் போஸ்டர்கள் ஊறிப் போய்ப் பெயர்ந்து தலை கவிழ்ந்திருந்தன.

திருவல்லிக்கேணி. ஆறு குடித்தனங்கள் உள்ள அந்தப் பழைய வீட்டின் மாடி போர்ஷனில் வந்தனா இட்லி சாப்பிட்டு விட்டு, தட்டைக் கழுவி வைத்துத் தண்ணீர் குடித்தாள். அருகே சுவரில் தேதி கிழிக்க முயல, ஓட்டின் இடுக்கு வழியாகச் சுவரெல்லாம் வரிவரியாக வழிந்திருந்த நீரில் காலண்டர் நனைந்து போய் ஒட்டிக் கொண்டிருந்தது.

''வெயில் வந்ததும் காலண்டரைக் காய வெச்சுடும்மா,'' என்றாள்.

''இன்னிக்கு வெயில் வர்ற மாதிரி எனக்குத் தெரியலை. நேத்துத் துணிங்களே இன்னும் காயலை,'' என்ற அம்மா, அமர்ந்து தேங்காய் துருவிக் கொண்டிருந்தாள். ஐம்பத்தி இரண்டு வயதிற்கு ஒரு நரை கூட இல்லாத, கழுத்தில் மடிப்பில்லாத, கண்ணுக்கும் கீழ் சுருக்கங்கள் இல்லாத அம்மா. ஆனால் நெற்றியில் விபூதி மட்டும்.

''அம்மா, நீ குங்குமம் வச்சிக்க வேணாம். சாந்து வெச்சிக்க. இல்லைன்னா மையாவது வெச்சிக்க. கஷ்டமா இருக்கும்மா பார்க்க...''

அண்ணன் கோபி பலமுறை கெஞ்சியிருக்கிறான். அம்மா ஒப்புக் கொண்டதில்லை. கோபியிடம் வந்தனா வேறு விதமாக இதைப் பேசியிருக்கிறாள்.

''எதுக்காக அம்மா பொட்டு வச்சிக்கணும்னு சொல்றேண்ணா?''

''பார்க்க நல்லால்லை வந்தனா. நெத்தி நிறையப் பொட்டு வச்சி... அப்படியே பார்த்துப் பழகிடுச்சி. அம்மாவைப் பொட்டோட பார்க்கிறப்போ எவ்வளவு மங்களகரமா இருக்கும்?''

''பேத்தாதே. எல்லாரையும் மாதிரி சென்டிமென்ட்ஸ் பேசாதே. இந்தச் சம்பிரதாயங்கள் எல்லாம் எங்க வர்க்கத்தை நசுக்கி வச்சது போதும். யோசிச்சுப் பாரு. தொண்ணூறு சதவீத சம்பிரதாயங்கள் பொம்பளைங்களுக்குத்தான். பெண்டாட்டி செத்துட்டா ஜென்மத்துக்கும் அந்த புருஷன் மீசையே வைச்சுக்கக் கூடாதுன்னு ஒரு சம்பிரதாயத்தை வச்சிருக்க வேண்டியது தானே? வச்சாங்களா?''

''வைக்கலைதான்.''

''ஏன் வைக்கலை? சம்பிரதாயங்களை வகுத்தவங்க ஆம்பிளைங்களா இருந்திருப்பாங்க! ஆம்பளை பல பெண்டாட்டிங்க வெச்சுக்கலாம். அதுமட்டுமில்லை... பொம்பளையைப் பொருளா விலை பேசி வித்திருக்கானுங்க. வாங்கியிருக்கானுங்க... என்ன திமிர் இருந்தாப் பெண்டாட்டியைச் சூதாட்டத்தில பணயமா வைச்சிருப்பான்? அந்தக் கதையை ஞாயித்துக்கிழமை ஞாயித்துக்கிழமை கூடம் காட்டாத குறையா உக்காந்து பார்க்கிறோம். என்னைப் பொறுத்த வரைக்கும் ஒரு பொண்ணு பொட்டு வச்சிக்கிறதோ, வச்சிக்காததோ பெரிய விஷயம் இல்லை. அதில் மங்களமும் இல்லை. அமங்களமும் இல்லை. இவ பொண்ணுன்னு அடையாளம்காட்டறஒருலேபிள். அவ்வளவுதான். என் பாய்ன்ட் வேறே. நீலகண்டனுக்காக அம்மா பொட்டைத் துறந்தது தான் எனக்குப் பிடிக்கலை.''

''வந்தனா, நம்ம அப்பான்னு சொல்ல மாட்டியா? அதென்ன பேர் சொல்லிக்கிட்டு?''

''ஆளைக் குறிப்பிடறதுக்குத்தானே பேரு? அப்பான்ற வார்த்தைக்கெல்லாம் தகுதியில்லாதவர் அந்த ஆளு.''

''என்ன இருந்தாலும் நம்ம அப்பா வந்தனா.''

''மன்னிக்கிற ஆத்மா மகாத்மான்னா நீ, அம்மா, சூர்யா எல்லாரும் மகாத்மாக்களாகவே இருங்கப்பா. நான் சாதாரண ஆத்மாவாகவே இருந்துடறேன்.''

''செத்ததுக்கப்புறம் ஒருத்தர் தெய்வமாகிடறார் வந்தனா...

''என்னைச் சீண்டாதே. அப்படின்னா

எத்தனை கோடி தெய்வங்கள்!''

கோபி ஓர் இரண்டுங்கெட்டான். தங்கையோடு பேசிக் கொண்டிருக்கும் போது அவள் சொல்வது நியாயம் என்று படும். ஆமோதித்து வைப்பான். அம்மாவிடம் பேசிக் கொண்டிருக்கும் போது அவள் சொல்வதும் நியாயமாகவே படும். தலையசைப்பான். இரவில் அறையில் 'இதோ பாருங்க' என்று ஆரம்பித்துப் பானுமதி சொல்வது புதிய நியாயமாகப் படும். அங்கேயும் தலையசைத்து வைத்து விடுவான். ஆனால் வாதம் செய்வது தங்கையிடம் மட்டுமே.

யார் சொல்லியும், எப்படிச் சொல்லியும் அம்மா விபூதி தவிர, வேறெதுவும் வைத்துக் கொள்வதாக இல்லை.

''அண்ணி எங்கே காணோம்? நீ சாப்பிட்டியாம்மா?'' என்றாள் வந்தனா.

''இதை முடிச்சுட்டுச் சாப்புடறேன். திவ்யாவைத் தூக்கிட்டுப் போனா பானு.''

ஹாலின் ஒரு கதவைத் திறந்தால் உடனே மொட்டை மாடி. அங்கே குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு பானுமதி, ''சனியனே! உயிரை வாங்கறியே! இப்ப சாப்பிடப் போறியா இல்லையா?'' என்று அதட்டி அதன் வாயில் திணிக்க, குழந்தை மிரண்டு துப்பியது.

''ஏற்கெனவே திவ்யாவுக்கு ப்ரைமரி காம்ப்ளெக்ஸ். அண்ணியை உள்ளே வந்து போடச் சொல்லும்மா.''

''ஏன், அதை நீதான் சொல்லேன்.''

''அனாவசியத்துக்கு வார்த்தை வரும். பெத்தவங்களுக்குத் தெரியும்னு பளிச்சுன்னு சொல்வாங்க. காலையிலேயே வாங்



டிக்கணுமா, நான்?''

வந்தனா காப்பி கலந்து, தம்ளரில் எடுத்துக் கொண்டு, சமையலறையை விட்டு எதிரே இருந்த அறையை நோக்கி வர, அதன் இரட்டைக் கதவுகளைத் திறந்து, சூர்யா தாவணியைச் சரி செய்து கொண்டே வந்தாள்.

''அக்கா, போய்ட்டு வர்றேன்.''

''இன்னும் புறப்படலையா நீ? ஸ்கூட்டர்ல உன்னைக் காலேஜிலே இறக்கி விட்டுட்டுப் போறேன்னு அண்ணன் சொன்ன மாதிரி கேட்டுச்சே?''

''நான் அப்பத்தான் குளிச்சுட்டு வந்தேன். அண்ணன் தயாராப் புறப்படறதோதுல இருந்துச்சி. 'எனக்கு லேட்டாகும், நீ போ'ன்னு சொல்லிட்டேன். குடை எடுத்துட்டுப் போறேன். உனக்கு வேணாமே?''

''வேணாம். பாவாடையைக் கொஞ்சம் ஏத்தி விட்டுக்கோ, தரை கூட்டுது.''

வந்தனா அந்த அறைக்குள் வந்தாள்.

மாட்டியிருந்த கண்ணாடியில் முகம் பார்க்க வெளிச்சம் போதவில்லை. கழற்றி எடுத்து ஜன்னலருகே திரை நகர்த்திப் பார்த்துக் கொண்டாள்.

எண்ணெய் இறங்கிய கல்தோடாக, மிகவும் மங்கலாக இருந்தது ஆகாயம். ஒரு பறவையையும் காணோம். பந்த் தினக் கடைவீதி போல, மரங்கள் அசங்காமல் வெறிச்சென்றிருந்தன. பக்கத்து வீட்டின் ஓட்டுச் சரிவு, குப்பை கழுவப்பட்டுப் பளிச்சென்றிருந்தது. அருகே ஓடின மின்சாரக் கம்பிகளில் முத்து மாலை கட்டிவிட்டது போல நீர்த்திரள். பத்துக் கட்டடம் தள்ளி, ஹோட்டலின் சமையலறையில் இருந்து கிளம்பி, புகைபோக்கி வழியாகப் பரவிய புகையில் சாம்பார் மணம் இருந்தது.

வந்தனா காப்பியைப் பருகிவிட்டு, சில்லென்ற உள்ளங்கைகளைக் கன்னங்களில் பொத்திக் கொண்டாள். ஒரு நாற்காலியை ஜன்னலருகே இழுத்துப் போட்டு, சிலிர்க்க வைக்கும் ஈரத் தென்றலில் பட்டுக் கொண்டு, எழுநூறு பக்க நாவலைப் படித்துக் கொண்டேயிருக்கலாம் போல ஆசையாக இருந்தது.

இன்றைக்கு ஆபீஸ் போகத்தான் வேண்டுமா என்று திடீரென்று அலுப்பாக வந்தது. மந்தமான, குளிர்ச்சாரல் வீசும் ஒரு மழைக் காலக் காலையில், வீட்டை விட்டு வெளியே புறப்படுவது என்பது அவஸ்தை. உற்சாகமில்லாத விஷயம். அய்யோ, இன்றைக்கு ஞாயிறாய் இருக்கக் கூடாதா, என்று ஏங்கும் பள்ளிச் சிறுவனின் மனநிலை, தவிர்க்க முடியாமல் வந்து விடுகிறது.

''வந்தனா, நீ இன்னும் புறப்படலை? உனக்கு நேரமாகலை?''

''இதோம்மா.''

வந்தனா காப்பி தம்ளரைக் கழுவிக் கவிழ்த்து வைத்துவிட்டு, கைப்பையைத் தோளில் மாட்டி, சாப்பிட்டுக் கொண்டிருந்த அம்மாவுக்கு ஜக்கில் இருந்து தம்ளரில் தண்ணீர் சரித்து விட்டு, ''நான் புறப்படறேன்'' என்றாள்.

''மத்தியானம் வந்துடுவேதானே? இன்னிக்கு ரேடியோ ஸ்டேஷன்லே ப்ரோக்ராம் எதுவும் இருக்கா?''

''திடீர்னு போன் செஞ்சி கூப்பிட்டாலும் கூப்பிடுவாங்க. அநேகமா இருக்காது. அப்படி இருந்தாலும் வீட்டுக்கு வந்து சாப்பிட்டுட்டுத்தான் போவேன். எப்பப் போட்டாலும் மூணு மணிக்கு மேலேதான் எனக்கு டைம் போடணும்னு சொல்லியாச்சு. அண்ணி சாப்பிட்டாச்சா?''

''இன்னும் இல்லை. ரெண்டு தடவை சொல்லிட்டேன். திவ்யாவைத் தூங்க வச்சிட்டு வர்றேன்னா. குடை எடுத்துட்டுப் போம்மா.''

''ஒண்ணு ரிப்பேர். ஒண்ணு சூர்யா எடுத்துட்டுப் போயிருக்கா.''

''அண்ணிகிட்டே ஒண்ணு இருக்கே, கேளேன்.''

''நான் கேக்கறதா இல்லை.''

''வந்தனா, அவ புரியாதவளா நடந்துக்கிறான்னா, நீ புரிஞ்சவளா நடந்துக்கோயேன். அனுசரிச்சுப் போனா என்ன குறைஞ்சிடும்? விலகி விலகி அவகிட்டே மூணாவது மனுஷி மாதிரி நடந்துக்கறே. இப்ப அவளைக் கேளு. கொடுக்க மாட்டேன்னு சொல்லப் போறாளா? இதில எதுக்கு வீணா கௌரவம் பார்க்கணும்?''

''அம்மா, உனக்குப் புரியாது. தர மாட்டேன்னு சொல்ல மாட்டாங்க. ஆனா... இரு. அவங்ககிட்டே குடை கேக்கறேன். பதிலைக் கவனி.''

வந்தனா தன் அறைக்கு எதிரே இருந்த அண்ணனின் அறைக்கு வந்தாள். திவ்யாவைத்தூளியில்போட்டு இப்படியும் அப்படியுமாக வேகமாக ஆட்டிக் கொண்டே பானுமதி, ''சனியனே, இப்ப தூங்கப் போறியா, ஒண்ணு வைக்கட்டுமா? அஞ்சு மணிக்கு எந்திரிச்சி வெந்நீர் போட்டேன். பச்சைத் தண்ணி குடிக்கலை இன்னும். உன்னோட பெரிய பாடா இருக்கு, தினம்,'' என்றாள்.

ஒன்னேகால் வயது திவ்யாவுக்கு என்ன புரியும் என்று வந்தனாவுக்குப் புரியவில்லை. ''அண்ணி, நான் ஆட்றேன். நீங்க போய்ச் சாப்பிடுங்க.''

''வேணாம்மா. உனக்கு நேரமாச்சி. நீ போ. பத்து மணிக்கு முன்னாடி இந்த வீட்ல நான் டிபன் சாப்பிட முடியாது. இது தெரிஞ்ச கதை. இப்ப தூங்கப் போறியா இல்லையாடி கழுதை?''

''குழந்தையை ஏன் திட்டறீங்க? எனக்கு டைம் இருக்கு. இங்கே இருக்கிற ஆபீஸ். அஞ்சி நிமிஷ நடை. மழை நேரம். பத்து நிமிஷம் லேட்டாப் போனாக் கூட குப்தா ஒண்ணும் சொல்ல மாட்டார். நீங்க போய்ச் சாப்பிடுங்க. இட்லி ஆறிடும்.''

''தினைக்கும் நான் கடசுடத்தான் சாப்பிட்டுக்கிட்டிருக்கேனாக்கும். வந்தனா, நீ போ. இவ நான் ஆட்டினாத்தான் தூங்குவா.''

# இன்னொரு ஊழலா?



"போஃபர்ஸ்" என்ற சொல்லே ஊழலுக்கு மாற்றுப் பெயராகி விட்டதால் டி.வி. அதனைத் தவிர்ப்பதாகத் தோன்றுகிறது. போஃபர்ஸ் என்று சொன்னாலே இந்த அரசுக்கு அவப்பெயர் வந்துவிடும் என்று அஞ்சுகிறார்கள் போலும்! சமீபத்தில் கூடிய ராஜ்யசபைக் கூட்டத்தில் முதல் நாளே எதிர்க்கட்சியினர், 'போஃபர்ஸ் பிரச்னை' சம்பந்தமாகப் பிரதமர் நேரில் வந்து பதில் சொல்ல வேண்டும்' என்று குரல் எழுப்பினார்கள். அதுபற்றிக் குறிப்பிடும் போது, டி.வி. செய்தியில் 'ஹெளவிட்சர் 155 பீரங்கி' என்றேசொன்னார்கள். முன்னர் குடியரசு தின அணிவகுப்பில் இடம் பெற்ற போஃபர்ஸ் பீரங்கி பற்றியும் இவ்வாறேதான் டி.வி.யில் சொன்னார்கள். இப்படித் தொடர்ந்து 'போஃபர்ஸ்' என்கிற வார்த்தையை டி.வி. தவிர்த்து வருவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் இதில் ஒரு சின்ன சந்தேகம். 'போஃபர்ஸ்' அளவுக்கு 'ஹெளவிட்சர் 155' என்கிற வார்த்தை பிரபலமடையவில்லை. எனவே செய்தி அறிக்கைகளில் அதைக் கேட்கும்போது, 'ஓகோ, போஃபர்ஸ் தவிர இது இன்னுமொரு பீரங்கி ஊழல் போலிருக்கிறது' என்று மக்கள் நினைத்து விட மாட்டார்களோ!

— கே.

"அப்படின்னாச் சரி. உங்க குடையைத் தார்றீங்களா?"

"காலைல அத்தை மார்க்கெட்டுக்குப் போய்ட்டு வந்து விரிச்சி வச்சிருந்தாங்களே, பெரிய குடையை. அது எங்கே போச்சு?"

"அதை சூர்யா எடுத்துக்கிட்டுப் போயிருக்கா."

"பஸ்சுல போறவளுக்குக் குடை எதுக்கு? பச்சைக் கைப்பிடி வச்சி இன்னொண்ணு இருக்குமே, நம்ம வீட்டிலே?"

"அதை ரிப்பேர் செய்யணும்."

பானுமதி மெத்தைக்கு அடியில் இருந்து சாவி எடுத்துக் கண்ணாடி பொருத்திய இரும்பு பீரோவைச் சத்தமாகத் திறந்து, அந்த வெளிநாட்டுக் குடையை எடுத்தாள்.

"நானா தினம் வீட்டை விட்டு வெளியே போறேன்? மூணு பேர் போறீங்க. சும்மா இருக்கிறப்போ அதை ரிப்பேர் செஞ்சி வச்சிருக்கணும்னு தோணுதா யாருக்காச்சும்?" என்றவள், ஜன்னல் வழியாகப் பார்த்து, "மழைதான் இல்லை போலிருக்கே..." என்று சொல்லிக் கொண்டே குடையை நீட்டினாள்.

"அட, ஆமாம். கவனிக்கலை நான். மழை இல்லைன்னா எதுக்குக் குடை? உள்ளே வச்சிப் பூட்டிடுங்க அண்ணி." என்ற வந்தனா நகர்ந்து திரும்பி, அம்மாவைப் பார்க்க, அம்மா தன் காரியத்தில் தீவிரமாக ஈடுபட்டிருப்பவளைப் போல பாவனை காட்ட, புன்னகை செய்து கொண்டு, மாடிப் படிகளை நோக்கிச் சென்றாள்.

"வந்தனா, நில்லு" என்று அம்மா நீளமான பூச்சரத்தோடு வந்து, "காலைல மார்க்கெட் போனப்ப வாங்கினேன். திரும்பு, வச்சி விடறேன்," என்றாள்.

"வேணாம்மா. நான் வர்றேன்."

"எதை வேணாம்னு சொல்றது? திரும்புடின்னா..." கூந்தலில் இழை பிரித்து நுழைத்துச் சரிசமமாகத் தொங்கவிட்டு, "இப்பப்பாரு, மகாலக்ஷ்மியாட்டம் இருக்கே. போய்ட்டு வா" என்றாள் அம்மா.

வந்தனா இறங்கி வந்து, சேலையைச் சற்றே தூக்கிப் பிடித்து நடந்து, அண்ணா சிலையருகே சுரங்கப் பாதைக்கான படிகளில் இறங்கினாள். சொத சொதவென்று ஏராளமான ஈரச் செருப்புப் பதிவுகளிருக்க, நிதானமாக நடந்தாள். அந்தக் குப்பைத் தொட்டியருகில் நின்றாள். கூந்தல் பிசிறாமல் அம்மா வைத்துவிட்ட பூச்சரத்தை எடுத்து, போகிற போக்கில் அதைக் குப்பைத் தொட்டியில் வீசிவிட்டு, மறுமுனையில் படிகள் ஏறினாள்.

(தொடரும்)

இன்னும் சொல்லவில்லை.

வாய்வரை வந்து வந்து வார்த்தைகள் விலகிப் போயின.

மனைவி என்றாலும் தனி மனுஷி அல்லவா!

தனக்கென்று எண்ணம், செயல், ஆசைகள் கொண்ட இன்னொரு ஜீவன். எப்படிச் சொல்லுவதாம்?

"சீக்கிரம் வசந்தா... நேரமாச்சு" முகத்தில் செயற்கையை வரவழைத்துக் கொண்டு ரங்கராஜன் அவசரப்படுத்தினார். "இன்னும் அஞ்சு நிமிஷம் தான் டைம்... அதுக்குள்ள ரெடியாயிரணும்...." பின்கட்டுக்குப் போனார்.

ஐம்பது நிமிடங்களாவது ஆகும் என்று உள்ளூரக் கணக்கு. இயல்பாகிப் போன விஷயம்தான் இது. என்றைக்கு உடனே கிளம்பி இருக்கிறாள்?

உடை மாற்றி, கண்ணாடியில் முகம் பார்த்து, தலைசீவி, பவுடர் பூசி, மையிட்டு....

பத்து வயதைக் குறைத்துக் கொள்வது சின்ன விஷயமா?

மனசுக்குள் முள் அழுந்தியது. 'இந்த

# சில புதிர்கள்...

வீட்ல ஒரு சின்னப் புயல் உருவாக நீ காரணமா இருக்கப் போறது உனக்குத் தெரியுமா...... வசந்தா?' தமக்குள் கேட்டுக் கொண்டார்.

கேள்வியும், கேள்விக்கான பதிலும் அயர்ச்சி தருவதாக இருந்தது. மறுபடியும் சொல்ல வேண்டிய விஷயம் ஞாபகத்திற்கு வர, எப்படி ஆரம்பிப்பது என்பது சிக்கலாகத் தெரிந்தது. 'அப்படியா?' என அவள் அதிர்வதைக் காணச்சகிக்காத உள்ளம்.

நாளைக்கு ராஜியும், மாப்பிள்ளையும் வருகிறார்கள். அதற்கு முன்பாக வசந்தாவுக்கு இந்த விஷயம் தெரிந்தே ஆக வேண்டும்.

மனசுக்குள் ஒத்திகை பார்த்துக் கொண்டார்.

உள்ளே திரும்ப, இன்னும் அடுப்படியிலேயே இருந்தாள்.

"ரெடியாகலையா?"

"கொஞ்சம் பொறுங்க. சாதத்தை இறக்கி வச்சுட்டா வேலை முடிஞ்சுது..."

"சீக்கிரம்..."

"என்ன அவசரம்? நாளைக்குத்தான் ஷாப்பிங் போறது..."

"அவுங்க வந்த பிறகா?"

அவள் பதில் சொல்லவில்லை. மீண்டும் எதையோ கிளற ஆரம்பித்தாள்.

ஒரே வீட்டில் சேர்ந்து வாழ்ந்தாலும், அவரவருக்கு என்று ஓர் உலகம் இருப்பது ஆச்சரியமாக இருந்தது ரங்கராஜனுக்கு. ரவீந்திரனின் ஞாபகம் வந்தது. தன்னை முன் நிறுத்திப் பார்ப்பவனுக்கு அடுத்தவர் விஷயம் சாதாரணம். அதனால்தான் அத்தனை எளிதாக வார்த்தைகளை வீசி எறிய முடிந்ததா அவனுக்கு.

'உங்கம்மாவைப் பார்க்கவே சங்கடமா இருக்கு. சின்னப் பொண்ணு மாதிரி இன்னும் என்ன அலங்காரம்? உங்கப்பா ஒண்ணும் சொல்ல மாட்டாரா?' — எப்பேர்ப்பட்ட வார்த்தை.

அவர் காதில்விழட்டும்என்றேசத்தமாகப் பேசினானோ என்னவோ!

ரங்கராஜன் ஒருகணம் ஆடிப் போனார்.

வாழ்க்கையில் இப்படியெல்லாம் கூட பிரச்னை வருமா என்றிருந்தது. பெண்ணைக் கட்டிக் கொண்டவனுக்கு இதற்கெல்லாம் கூட உரிமை உண்டா? மருமகன் என்பவன் விருந்தாளிதானே? அத்து மீறல் இல்லையா இது?

அவனது குரலில் இருந்த வெறுப்பையும், தீவிரத்தையும் மீண்டும் நினைத்துப் பார்க்கக் கசப்பளித்தது.

மாமியார் என்பவள் எட்டு கெஜம் புடைவையைச் சுற்றிக் கொள்கிறவள். கதவுக்குப் பின்னே தன்னைப் பாதி மறைத்தபடி, 'வாங்கோ, மாப்பிள்ளை...' என்று வரவேற்புத் தருகிறவள். பிரியத்துடன் மாய்ந்து மாய்ந்து பட்சணங்கள் பண்ணிப் போடுகிறவள். காலம் காலமாய் இப்படியே...

அதுதான் வசந்தாவைக் கண்டதும் வெறுப்பு வருகிறதா?

இங்கிலீஷில் பேசி —

எதிரில் சமமாக உட்கார்ந்து —

"ஹௌ ஈஸ் யுவர் லைஃப்?" என அன்பாக விசாரித்து —

இதெல்லாம்வரம்.கௌரவம்.பெருமைப்பட வேண்டிய விஷயம். எத்தனை பேருக்கு இத்தனை நாகரிகமான உறவு கிடைக்கிறது? அதெல்லாம் உனக்கு ஏன் தெரியவில்லை ரவீந்திரன்?

நல்லவேளை. அடுத்த நாளே இருவரும் கிளம்பிப் போய்விட்டார்கள். வசந்தாவுக்குத் தெரியாமல் மறைத்தாயிற்று.

ஒரு மாதமாகி விட்டது.

நாளைக்கு மீண்டும் வருகிறார்கள்.

ரவீந்திரன் தனது கொடுக்கு வாயை வைத்துக் கொண்டு சும்மா இருப்பானா? எப்படிச் சமாளிப்பது?

வசந்தாவிடம் பக்குவமாகச் சொல்லி

---

**மும்தாஜ் யாசீன்**

விட வேண்டியதுதான்.''

"என் வேலை முடிஞ்சது. இனி கிளம்ப வேண்டியதுதான்...'' வசந்தா முந்தானையால் கைகளைத் துடைத்துக் கொண்டே எதிரே வந்து நின்றாள்.

சிவந்த நிறம், திமுதிமுவென்ற உருவம். உரித்த வாழைத் தண்டாக நீண்ட கரங்கள். நெற்றியில் அரும்பிய வியர்வையைப் புறங்கையால் துடைத்துக் கொள்வதைக் காண, கட்டி ஆளத் தோன்றியது அவருக்கு. பெண்களைப் பொறுத்தவரை, ஒவ்வொரு வயதுக்கும் ஒவ்வோர் அழகு.

'யு லுக் வெரி ஸ்மார்ட் வசந்தா...' களிப்பூட்டிய பழைய நாட்கள் ஞாபகத்திற்கு வந்தன. நாலு இடங்களுக்குப் போய், பார்ட்டிகளில் கலந்து கொண்டு, 'மீட் மை ஒய்ஃப்...' எனப் பெருமையுடன் அறிமுகப் படுத்தி....

இப்போது மட்டும் என்ன?

அம்மாவைப் பார்த்துட்டு என் சிநேகிதங்க இது என் சிஸ்டரான்னு கேக்கறாங்கப்பா....' — ராஜி சிரித்துக் கொண்டே சொன்னதில்லையா?

எத்தனை பேருக்கு வாய்க்கிறது. இந்த மாதிரி.

'நீ பொடிசு. சின்னப்பயல். உனக்குத் தெரியாது ரவீந்திரன்...'

அவருக்கென்னவோ பெண் பார்க்க வந்தபோதே அவனைப் பிடிக்கவில்லை.

பக்தியை விபூதியாக அப்பிக் கொண்டு வந்திருந்தான். பட்டு வேட்டி. முழுக்கைச் சட்டை. கண்களை மூடிப் பிரார்த்தித்து விட்டுத்தான் பச்சைத் தண்ணீர் கூடக் குடித்தான்.

'பையன் எப்படி?'

'வாட் டு யு திங்க் அபெளட் ஹிஸ் மேக் அப்? இந்த வயசுல இப்படி இருக்கிறது வேஷம் இல்லையா?'

'உங்களுக்கு எதையும் வியாக்கியானம் பண்றதே பழக்கமாப் போச்சு. கிராமத்துப் பூர்வீகம். பாவம்...' வசந்தா பரிந்து பேசி

னான்.

'வயசுக்குத் தகுந்த வேஷம் கட்டணும். எனக்கென்னமோ இது அதிகம்னு தோணுது...'

'விடுங்க... ப்ராப்தம் இருந்தா பொண்ணு மாத்திட்டுப் போறா...'

'பார்க்கலாம். பொறு....'

நல்ல உத்தியோகத்திலிருந்தான். நில புலன்களென்று ஓரளவுக்கு வசதியும் இருந்தது. பார்க்கவும் லட்சணம். விசாரித்த வகையில் கெட்ட பழக்கங்கள் ஏதும் இல்லை. ஒரு அற்ப விஷயத்திற்காக மறுத்து விடுவதா?

மறுபடியும் யோசித்தார்கள். விவாதித்தார்கள்.

'ஏம்மா... உனக்கு இஷ்டம்தானே....?'

உங்களுக்குப் பிடிச்சிருந்தா சரிப்பா...'

'முடிச்சுரலாம்ங்க. வேற பேச்சே வேணாம்...' வசந்தா முற்றுப் புள்ளி வைத்தாள்.

'இத்தனை பண்ணியும் உனக்கு நல்ல பெயர் கிடைத்து விட்டதா வசந்தா?'

**மு**தல் முறை வீட்டிற்கு அழைத்து வந்த போதே ரவீந்திரன் ஏதோ வித்தியாசமாக இருப்பதாக அவர் கணித்து வைத்திருந்தார்.

மற்றவர்களிடம் சிரித்துப் பேசியவன் வசந்தாவைக் கண்டதும் முகம் சுருங்கினான். ஒற்றை வரியில் பதில் சொல்லி முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

முதல் தடவை, சங்கோஜம் போலும் என நினைத்தார்.

இரண்டாம் முறை தமக்குள் கேள்வி கேட்டுக் கொண்டார்.

மூன்றாவது தடவைதான் பயப்பட ஆரம்பித்தார்.

ஏதாவது குறையா? இது சரியில்லை. அது சரியில்லை என்று உள்ளூர வருத்தமா? ராஜியைக் கூப்பிட்டு இரகசியமாக விசாரிக்க, 'ஒண்ணும் இல்லேப்பா....' என்றாள்.

'நோ... மனசுக்குள்ள என்னமோ இருக்கு.'

'கேட்டுச் சொல்றேன்'

'கேட்டியாம்மா?'

'இல்லேங்கிறார்ப்பா...'

அவள் சொன்ன தோரணையிலேயே தெரிந்தது. பொய். மகளும் மறைக்கிறாள்.

இருக்கட்டும். கத்தரிக்காய் மலிஞ்சா கடைத் தெருவுக்கு வந்துதானே ஆகணும்?

அன்றைக்கு சினிமாவுக்குப் போவதாக ஏற்பாடு.

'அம்மா நீயும் வர்றியாம்மா... எல்லோரும் சேர்ந்து போகலாம்...'

'சரி....'

வசந்தாவும் அவசரமாக வேலைகளை முடித்துக் கொண்டு புறப்படத் தயாராக—

'தலை வலிக்குது...' என்றான்.

'சரி. வேணாம்... இன்னொரு நாளைக்குப் போகலாம்...'

வசந்தா மீண்டும் அடுப்படிக்குத் திரும்பிவிட, உள் அறையில் அவன் ராஜியுடன் சிரித்துப் பேசுவது கேட்டது. கொஞ்ச நேரத்தில் இருவரும், 'கோயிலுக்குப் போய்ட்டு வர்றோம்மா...' என்று கிளம்பினார்கள்.

தலைவலி என்னவாயிற்று?

யோசிக்க, யோசிக்க ரங்கராஜனுக்கு மெதுவாக விளங்க ஆரம்பித்தது. அன்றிரவு அவர்கள் தனியாகப் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டதும் சந்தேகத்தை உறுதியும் செய்து கொண்டார் அவர்.

"**எ**ன்னை அவசரப்படுத்திட்டு நீங்க என்ன அப்படியே உட்கார்ந்திருக்கீங்க?'' வசந்தா உள் அறையிலிருந்து குரல் கொடுத்தாள்.

''நான் எப்பவோ ரெடி. நீ போகலாம்னு சொன்னா சட்டையை மாட்டிக்கிட்டுக் கிளம்ப வேண்டியதுதான்...''

''நான் புறப்பட்டாச்சு.''

''அதுக்குள்ளாகவா?'' பேப்பரை மடித்து விட்டு நிமிர, எதிரே வந்தாள்.

சாதாரண நூல் புடைவை. வெளிர் ஊதா. வீட்டு உபயோகத்துக்கு என்று எப்போதோ வாங்கியது. பின்னல் போடாமல் கொண்டையிட்டிருந்தாள். கைகளில் வெறும் கண்ணாடி வளையல்கள். நெற்றியில் மட்டும் பழக்கமான நிஜுசில் அதே குங்குமம். வசந்தாவா? வேறு யாரோவா?

பவுடரும், ஹாண்ட்பேக்கும் இல்லாத வசந்தா, யாரோ அந்நியஸ்திரீ போலத் தெரிந்தாள்.

''விளையாடறியா... ஷாப்பிங் போகணும்னு சொல்லலை?''

''அதான் நானும் வந்தாச்சே...''

''இந்த டிரஸ்ஸிலா?''

''ஏன் நல்லா இல்லையா?''

''இப்படித்தான் இவ்ளோ நாள் வந்தியா?''

''இவ்ளோ நாள் மாமியாரா இல்லையே... இப்பத்தானே ஆகி இருக்கேன்'' என்றாள் சிரித்துக் கொண்டே!



''இன்னிக்கு ரொ ம் ப 'டயர்டா' இருக்கு...''

''ஏன்? ஆபீஸிலே வேலை அதிகமா?''

''இல்லை! வேலை செய்யற மாதிரி ஏகப்பட்ட கனவு!''

— எஸ். பிரியதர்சினி.

## கோ-ஆப்டெக்ஸ்

# இல்லங்களுக்கு · எழிலூட்டும் · துணிவகைகள்













ஒவ்வொரு பெண்ணும் இல்லத்தரசி யாகிறாள்... உங்களது இல்லங்களில் அழகு மிளிர்ந்திட கோ-ஆப்டெக்ஸ் அளித்திடும் சிறந்த துணி வகைகள்— எண்ணற்ற வண்ணங்களில்.

- ☐ இதமான துவாலைகள்
- ☐ பரந்த படுக்கை விரிப்புகள்
- ☐ மனம் கவரும் மேசை விரிப்புத் துணிகள்
- ☐ புதுமை பொலிந்திடும் திரைச் சீலைத்துணி வகைகள்

**உங்கள் இனிய கனவுகள் நனவாகும் போது அதிலே கோ-ஆப்டெக்ஸின் பங்கும் உண்டு!**



**கோ-ஆப்டெக்ஸ்**
தமிழ் நாடு கைத்தறி

இந்தியாவின் உயர் விற்பனைக் கைத்தறி வகைகள்

DIPR 1089/MS/89/HTA

**எங்களது பிரத்தியேக ஆடையலங்கார அங்காடி கோலம், 843, அண்ணா சாலை, சென்னை — 2-க்கு விஜயம் செய்யுங்கள்.**

# வாழ்வின் ஒளி வளையம்







தீபாவளி – தீப ஒளி ஏற்றுங்கள் - அது உங்களை நல் வாழ்வெனும் பாதையில் நடத்தி செல்லட்டும். உங்களின் நேசத்திற்குரியவர்களுக்கும், சார்ந்தவர்களுக்கும் இன்று போல் என்றும் மகிழ்ச்சியையும், ஆனந்தத்தையும் அளிக்கட்டும்.





தீப ஒளி – வாழ்வில் துன்பமெனும் இருட்டை நெருங்க விடாமல், உங்களை இன்று காத்திடட்டும். ஆம் – என்றுமே உங்களை சுற்றி, சுற்றி இருக்கட்டும்!





**The South Indian Bank Ltd**

Regd. Office : Trichur, Kerala.

SAS/SIB/089

**வாழ்க்கையின் இன்பம் ஒளியே!**

# இரண்டாவது சூரியன்

## 13

### கடந்த பன்னிரண்டு வாரங்களில்...

**பா**னுமதி, பள்ளிக்கூட ஆசிரியை. இனியும் தன் கணவனோடு சேர்ந்து வாழ முடியாது என்ற சூழ்நிலையில் விவாகரத்துப் பெறுகிறாள். இரண்டு குழந்தைகளோடு விவாக ரத்துப் பெற்ற தால் பிறந்த வீட்டில் கூட முகம் சுளிக்கவே, குழந்தைகளோடு தனிக்குடித்தனம் துவங்கு கிறாள். கொடுமைக்காரக் கணவனிடமிருந்து விடுதலை பெற்றதில் மகிழ்ச்சிதான் என்றாலும், மறுபுறம் அவளையறியாமலேயே எதிர்காலம் பற்றியதொரு சோர்வு.

பானுமதியைப் போலவே விவாகரத்துப் பெற்ற வேலைக்காரி நாகம்மா பானுமதியிடம் வேலைக்கு வருகிறாள். விரிந்து நிற்கும் சவால் களை எதிர்கொள்ளத் தைரியம் தருகிறாள்.

பானுமதி வேலை பார்க்கும் பள்ளியிலுள்ள சில ஆசிரியைகளுக்குப் பானுமதியின் வாழ்க்கை ஒரு விமர்சனப் பொருளாகிறது. பானுமதி அதையெல்லாம் கண்டுகொள்ளாமல் போதிப்ப தில் கவனம் செலுத்துகிறாள். வாழ்க்கை பற்றிய யதார்த்த நிலைகளை மாணவிகளுக்கு விளக்கு கிறாள். தியானம் சொல்லித் தருகிறாள்.

இப்படி அவள் தியானம் சொல்லிக் கொடுத் துக் கொண்டிருந்த போதுதான் "என்ன நடக் கிறது இங்கே!" என்ற கேள்வியோடு பானுமதி யின் வகுப்புக்குள் நுழைந்தாள் ஆங்கில ஆசிரியை...

"இதுக்குப் பர்மிஷன் வாங்கினீங்களா ஹெச். எம்.கிட்டே...?" கண்மூடி உட்கார்ந்திருக்கிற பெண்களைப் பார்த்து அந்த ஆசிரியை கேட்டாள்.

"நாலு ரிலிஜன் பொண்ணுங்க வராங்க... இந்த மாதிரி புது பூஜையெல்லாம் செய்யறப்ப ஹெச். எம்.கிட்டே கன்ஸல்ட் பண்ண வேண்டாமா? பேரண்ட் அப்ஜெக்ட் பண்ணா...?"

"..."

"என்ன நான் கேட்டுக்கிட்டே இருக்கேன், பதிலே சொல்லாம நிக்கறே?"

"ஒரு அஞ்சு நிமிஷம் கழிச்சு வாங்க."

"வாட் நான்ஸென்ஸ் யூ ஆர் டாக்கிங்? ஏய்.... எழுந்திருங்கம்மா..." டபார் டபார் என்று மேஜையில் ஸ்கேல் தட்டப்பட்டது. ஆழ உள்ளுக்குள் மூழ்கியிருந்த சிலர் திடுக்கிட்டு நிமிர்ந்தார்கள்.

"என்ன தூக்கம் இது... கடைசி பெஞ்சிலேர்ந்து நாலு ஸ்டூடன்ஸ் வாங்க என் பின்னாடி..."

நாலு பெண்கள் எழுந்தார்கள். பானுமதியை ஏறிட்டார்கள்.

பானுமதி கை கட்டி அமைதியாய் இருந்தாள்.

"டூ அவர்ஸ் என் கூட இருக்கணும். அடுத்த பீரியட் டீச்சர்கிட்டேயும் சொல்லிடுங்க."

"இதுக்கு ஹெச். எம். பர்மிஷன் இருக்கா?"

"அவங்க சொல்லித்தான் க்ளீன் பண்ணப் போறேன்."

"என்கிட்டே கேட்க வேண்டாமா.. யாரை அனுப்பறது... எப்ப அனுப்பறதுன்னு தீர்மானிக்க வேண்டியது நான்தான்."

"உனக்கு ரொம்பக் கொழுப்புத்தான். கடவுளாப் பார்த்து இந்தக் கொழுப்புக்கு ஓங்கி மண்டையிலே அடிச்சும் அடங்கலை."

பானுமதிக்குச் சட்டென்று ஒரு வேதனை தாக்கிற்று. ஒரு க்ஷணம் மனசு தள்ளாடியது. வாய் கிழியத் தன்னைப் பற்றி அரட்டை அடிப்பார்கள் என்று தெரியும். ஆனால் வலிய வந்து தாக்குகிறார்களே.. உள்ளே கோபம் பொங்கியது. மனசு ஆடினால்... இப்போது சுருண்டு அடங்கினால் இனி துள்ளித் துள்ளித் தாக்குவார்கள்.

"என் கொழுப்பு அடங்கற கொழுப்பே இல்லை. உன்னை மாதிரி வெத்து அலட்டலுக்குப் பயப்படறவளும் இல்லை. பசங்களை அனுப்ப முடியாது."

"ஐயம் யுவர் ஸீனியர்."

"அதனால... நான் அடிமையா உனக்கு? மரியாதை கொடுத்து மரியாதை வாங்கு. கெட் அவுட் ஃப்ரம் மை கிளாஸ்."

அந்த டீச்சர் புயல் போல வெளியேறினாள். பெண்கள் பேசாமல் ஒரு பதற்றத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"இதோ... பாருங்கம்மா... என் பர்மிஷன் இல்லாம யாரும் எந்த கிளீனிங் வேலையும் செய்யக் கூடாது. கூப்பிட்டா எங்க மிஸ்ஸைக் கேளுங்கன்னு சொல்லிடணும். மீறி யாராவது போனா அப்புறம் என் கிளாஸ்ல சேர்க்க மாட்டேன். புரிஞ்சுதா? பீரோவுலேர்ந்து எல்லா டெஸ்ட் நோட்டும் எடுத்து

பாலகுமாரன்



அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதியான உட்ரோ வில்சனுக்கு, பேரணிகள்... கூட்டங்கள் என்றாலே அலர்ஜி. ஒருமுறை ஒரு பேரணியில் அவர் கலந்து கொண்ட போது, அருகிலிருந்த ஒருவர், ''பார்த்தீர்களா... உங்கள் பேச்சைக் கேட்க எவ்வளவு பேர் கூடியிருக்கிறார்கள்!'' என்று வியந்து சொன்னார்.

அதற்கு உட்ரோ வில்சனின் பதில்: ''என்னைத் தூக்கில் போட்டால், இதைப் போல் பத்து மடங்கு கூட்டம் கூடும் என்பதும் எனக்குத் தெரியும்!''

— நன்றி: தி வீக்.

தகவல்: ராஜி ராதா.

வையுங்க. யார் யார் எந்த பாடத்துல வீக்குன்னு எனக்குத் தெரியணும்.''

**ஹெச்.** எம். க்ளாஸ் முடித்து விட்டு வந்து பார்க்கும்படி சொன்னதாய்ச் சேதி வந்தது. நாற்பத்தி நாலு பெண்களில் நாலு பெண்கள்தான் படுமோசம். கொஞ்சம் தட்டிக் கொடுத்தால் தேறக் கூடியவர்கள் பத்து பேர். மிச்சம் தானாய்ப் பிழைத்துக் கொள்ளும் வகை. அதில் ஏழெட்டுப் பெண்கள் மகா சூட்டிகை.

''அந்த நாலு பேரும் என்னை இன்னிக்கு லஞ்ச் அவர்ல பார்க்கணும்.''

பெயர் சொல்லி விட்டு ஹெச்.எம். அறைக்குக் கிளம்பினாள்.

''என்ன பானுமதி பசங்க இல்லாத கிளினிங் எப்ப பண்றது? ஏன் அதிகமா பேசினே?''

''அவங்க பேசினாங்க மேடம். மெடிடேஷன் சொல்லிக் கொடுத்துட்டிருந்த க்ளாஸ்ல டிஸ்டர்ப் பண்ணாங்க.''

''இது என்ன புதுசா... க்ளாஸ்ல ஸிலபஸ் படி பாடம்தான் நடத்தணும். உங்க இஷ்டத்துக்கு எதுவும் சொல்லித் தரக் கூடாது. என்கிட்டே பர்மிஷன் வாங்க வேண்டாமா?''

''ஸாரி மேடம். நானே ஒரு சோதனை முயற்சியாச் செய்யலாம்னு... பசங்க ஆதரவாப் பதில் சொன்னா... உங்ககிட்டே கேட்டுட்டுத் தொடர்ந்து பண்ணலாம்னு.''

''கெட் அவுட்னியாமே.''

''என் பசங்க முன்னாடி என் பர்ஸனல் லைஃப் பத்தி கமெண்ட் அடிச்சாங்க.''

ஹெச்.எம். கவலையானார்.

''பானுமதி...?''

''யெஸ் மேடம்.''

''டீச்சர்ஸ் நாலுவிதமாப் பேசத்தான் செய்வாங்க. இது தவிர்க்க முடியாது. ஆதரவாவோ எதிர்ப்பாவோ பேசறதை எப்படித் தடுக்க முடியும்?''

''தாராளமாப் பேசட்டும். என் காதுக்கு வரும் போது என் எதிர்ப்பு நிச்சயம் கிடைக்கும்.''

''பானுமதி இது சண்டையா... சச்சரவா... வரக் கூடாது.''

''அப்ப இது பத்திப் பேசக் கூடாது மேடம். என்னைப் பத்திப் பேசினா நான் பதில் சொல்லாம இருக்க முடியுமா?''

''பானுமதி என் அபிப்ராயத்தில் நீ நல்ல டீச்சர். அமைதியான பெண். இதமான குணம்.''

''இப்பவும் அப்படித்தான். ஆனா இதுக்காக அவங்க என்ன பேசினாலும் நான் அமைதியா, இருப்பேன்னு எதிர்பார்க்கக் கூடாது.''

''புரியுது பானுமதி. க்ளாஸுக்குப் போ.''

''தாங்க் யூ மேடம்.''

**உ**ள்ளே துள்ளிற்று. வன்முறைக்குத் தான் மதிப்பு. முரட்டுத்தனத்துக்குத்தான் பயம். இப்படிப் பேசுகிறார்களே என்று இரண்டு சொட்டுக் கண்ணீர் விட்டிருந்தால் ஏகமாய் எக்களிப்புப் படர்ந்திருக்கும். இது பள்ளிக்கூட வேலை. அரசு சம்பளம். இங்கு யார் என்ன செய்து விட முடியும்?

யாரும் யாரையும் எதுவும் செய்து விட முடியாது. ஆனால் என்னைப் பற்றிப் பேசாமலிரு என்று கட்டளை போட்டு விட முடியாது. இந்தச் சண்டை எல்லோருக்கும் வெவ்வேறு விதமாய்ப் போய்ச் சேர்ந்தது. இரண்டு பக்கமாய்ப் பேசப்பட்டது. ஆதரவாகப் பேசியவர்கள் யார் யார் என்று தெரிந்தது. ஆனாலும் 'தாங்க் யூ' என்று இதற்குச் சொல்ல முடியவில்லை. இதற்கு ஆதரவு தெரிவித்து விட்டு என்னிடம் வந்து, 'இப்ப உன் புருஷன் பத்தி நீ என்ன நினைக்கிறே?' என்கிற வம்பு வருமோ என்று பயந்தாள்.

வீட்டின் தனிமையைப் பள்ளிக்கூடம் தீர்த்து விடும் என்று நினைத்தவளுக்குப் பள்ளிக்கூடமும் ஒரு தீயாய்ப் போயிற்று. உள்ளே புதுசாய் இரண்டு மூன்று புடைவைகள் இருக்கின்றன. பள்ளிக்கூடம் போகும் போது கட்டிக் கொள்ளலாம் என்று வாங்கிய புடைவைகள். அதில் ஒரு காஞ்சி காட்டன். மஞ்சளும், சிவப்புமாய்க் கட்டிக் கொண்டு போனால், அத்தனை பேரும் விலை விவரம், கடை விவரம் கேட்பார்கள். 'மினுக்கறா பாரு' என்று சொன்னாலும் சொல்வார்கள். எடுத்து வைத்து விட்டுச் சாதாரணப் புடைவை உடுத்திக் கொண்டு போனாள். வகுப்பில் அதிக அக்கறை காட்டினாள். தனித் தனியே மோசமான நான்கு பெண்களோடு பேசினாள். மூன்றில் ஒன்று எது செய்தாலும் படிப்பு வராது.

இரண்டு கல்யாணத்துக்கு நிற்பதாகத் தெரிந்தது. கடைசிப் பெண்ணுக்கு வீடு சரியில்லை. ஏழைமை. அப்பா விறகுவெட்டி.

''ஏன் வரலட்சுமி இங்கிலீஷ் மீடியத்துல கஷ்டப்படறே?''

''எப்படியாவது பெரிய நிலைக்கு வரணும் மிஸ். நான் கஷ்டப்பட்டுத்தான் படிக்கறேன். ஏற மாட்டேன்னுது. படிக்கறப்பவே மறந்து போயிடுது. நான் ஏன் இப்படிப்பட்ட இடத்துல பொறந்தேன்னு...'' அழுதது.

''ச்சே... ச்சே.. நான் இருக்கேன்...'' தைரியம் சொன்னாள். ஆனால் அடிப்படையே அவளுக்குத் தகராறு. ஏகப்பட்ட தாழ்வு மனப்பான்மை. பானுமதிக்கு அவளைப் பற்றிக் கவலை வந்தது.

**மூ**ன்று நாள் பள்ளிக்கூடம் போன பிறகு சனி, ஞாயிறு நாகம்மாவின் துணையுடன் வீடு புரட்டி ஒழித்தாள்.

வரலட்சுமி தகப்பனுடன் வாசலில் வந்து நின்றாள். வீடு சுத்தமாய்க் கலைந்து கிடந்தது.

''வீடு மாத்தறீங்களா டீச்சர்?'' என்று நுழைந்தவுடன் கேட்டது.

''இல்லம்மா க்ளீன் பண்றேன்.''

''நான் ஹெல்ப் பண்றேன் டீச்சர்.'' இடுப்பில் தவலை தூக்கிக் கொல்லைப்புறத்துக்கும் ஹாலுக்கும் பல நடைகள் நடந்தது. தடுத்த போதும் விடாது அவள் தகப்பன் படங்கள் துடைக்கத் துவங்கினான். ஜன்னல் சட்டங்களும், கதவு விளிம்பும் அழுத்தித் துடைத்தான்.

''என்னங்க இது... எனக்கு இதெல்லாம் பிடிக்காது...'' மறுத்துப் பார்த்தாள்.

''என் பொண்ணைக் கரையேத்தி விடு தாயி. படிப்பு வரலை. நின்னுரட்டுமான்னு தினம் அழுவுது. நான்தான் விரட்டிக்கிட்டு இருக்கேன். எங்க தலைமுறைல ஒன்பதாவது வரைக்கும் படிச்சது இதுதான். பத்து முடிக்கணும் தாயி எப்படியாவது.''

''பத்தாவது என்ன... காலேஜ் வரைக்கும்



கூடப் போகலாம். வரலட்சுமியைப் பள்ளிக்கூடம் விட்டதும் என் வீட்டுக்கு வரச் சொல்லுங்க. எட்டு மணி வரைக்கும் படிக்கட்டும்.''

''எனக்குப் பணம் அதிகம் தர முடியாதுங்க.''

''நான் பணத்தைப் பத்தியே பேசலை பெரியவரே. வரலட்சுமி சொல்லிருக்கா. எனக்குத் தெரியும் உங்க நிலைமை. ரெண்டு மாசத்துல அவளை மாத்திக் காட்டறேன். பயப்படாதீங்க.''

வரலட்சுமிக்குப் படிப்புத்தான் வரவில்லை. அவள் போட்ட இழைக் கோலமும் பானுமதியின் பெண்ணுக்குத் தலைவாரி பவுடர் பூசிப் பொட்டிட்டதும், நறுவிசாய் இருந்தன.

''நாளைலேர்ந்து படிக்க வந்துடுடி.''

ஒரு வாரத்துக்குப் பிறகு கல்யாணத்துக்கு நின்ற இரண்டு பெண்களும் டியூஷனுக்கு வருகிறேன் என்றார்களாம்.

''அழைத்து வரட்டுமா?'' என்றாள்.

மூன்று பெண்களும் வாசலை அடைத்துக் கொண்டு நின்ற போது, வகுப்பே வீட்டுக்கு வந்து விட்டாற்போல் ஒரு பிரமை தோன்றியது. நைன்த் ஸ்டாண்டர்ட் என்றாலும் நன்கு வளர்ந்த பெண்கள். யூனிஃபார்மில் தெரியாத வளமை பாவாடை தாவணியில் தெரிந்தது. டியூஷனுக்குக் காசில்லை என்று தெரிந்ததும் ஆச்சரியப்பட்டன.

''சமையல்ல ஹெல்ப் பண்ணட்டுமா டீச்சர்?''

''ச்சு போ. போய்ப் படிக்க உட்கார்.''

இவை மக்குகள் இல்லை. எதற்குப் படிக்க வேண்டும் என்கிற இறுமாப்பு. படித்து என்ன ஆகப் போகிறது என்கிற அலட்சியம். பானுமதி குழந்தைகளோடு ஆட்டம் போட்டன. கதை சொல்லின. பாட்டுப் பாடின. அதட்டிக் குரல் கொடுக்கப் புத்தகம் பிரித்து உட்கார்ந்து கொண்டன.

''எதுக்குப் படிப்புன்னு நினைக்காதீங்கம்மா. இப்போது பிரச்னையே இல்லைங்கறதால தேவையில்லைன்னு நினைக்கலாம். பிரச்னை வந்துடுச்சுன்னாப் படிப்பு ரொம்ப முக்கியமாயிடும்.''

''பிரச்னை எப்படி வரும்? அடங்கிப் போயிட்டா பிரச்னையே வராதே?''

''எதுக்கும்மா அனாவசியமா அடங்கிப் போகணும்?''

''அதான் நல்லதுன்னு எங்க வீட்ல சொல்றாங்க. எங்கம்மா படிக்கலை. சும்மா தினத்தந்தி படிப்பாங்க. ஆனா எழுதத் தெரியாது. அவங்க சொல்றாங்க... நான் இத்தனை வருஷம் குடித்தனம் பண்ணலையா.... குறைஞ்சா போயிட்டேன்றாங்க?''

''அவங்க பீரியட்ல படிச்ச பொம்பளை குறைச்சல். இப்போ அதிகம். நாளைக்குத் தோணும் பி.ஏ.,.... எம்.ஏ. படிக்கலையேன்னு...''

''தோணாது டீச்சர். எங்கக்காவ இரண்டு வருஷத்துக்கு முன்ன கட்டிக் கொடுத்தோம். அது எட்டாவது படிச்சது. அவங்க மாமியாரோட சண்டை போட்டுக்கிட்டுத் தனியே வந்துட்டா. தனியா வீடு பார்த்து வச்சோம். நல்லாத்தான் இருக்கா. எல்லாப் படமும் வீட்டுக்காரரோட முதல் வாரம் பார்த்துடும்.''

''சந்தோஷம். வீட்டுக்காரன் பொட்டுன்னு போயிட்டான்... அப்ப அவ கதி? உனக்கு வாழ்க்கை புரியலை பொண்ணே...''

தங்கமணியும் ரெங்கமணியும் சட்டென்று பாடங்கள் பிடித்துக் கொண்டார்கள். வரலட்சுமிக்கு நாலு முறை சொல்லித் தர வேண்டியிருந்தது. தயங்கித் தயங்கித்தான் பதில் வந்தது.

டியூஷனுக்கு வந்த ஒரு மாதம் கழித்து அந்த மக்குப் பெண் வனிதா ஒரு முப்பது வயது ஆளோடு வீட்டுக்கு வந்தாள்.

வாசலில் ஏறியதும் அழுதாள்.

''என்ன.... என்னம்மா?''

''எனக்கு டியூஷனுக்கு வரக் கூட பயமா இருக்கு டீச்சர்.''

''ஏன் வனிதா?''

அந்த இளைஞன் படியேறினான். வணக்கம் சொன்னான். ''என் பெயர் பரத்வாஜன். பரத்னு கூப்பிடுவாங்க. இது என் மூத்த சகோதரியின் மகள். இவளுக்குப் பிரச்னைகள் இருக்கின்றன.''

''என்ன பிரச்னை?''

''கிட்டத்தட்ட இவள் ஒரு மூளை வளர்ச்சி இல்லாத பெண். வெளியே தெரியாது. மிகவும் கஷ்டப்பட்டுப் பல மருந்துகள் கொடுத்துச் சற்று ஒப்பேற்றியிருக்கிறோம். இவள் வயசுக்கு ஏற்ற புத்தி இல்லை. டல்தான். இவள் படிக்க வருவது ஒரு மனமாற்றம் கருதியே.''

''கேள்விப்பட்டிருக்கிறேன்.''

''இவள் உங்களிடம் டியூஷனுக்கு வர வேண்டும் என்று நச்சரிக்கிறாள். இதில் பிரயோஜனம் இல்லை. ஆயினும்...''

''இவள் படிக்க வேண்டியது அவசியமா. கஷ்டமில்லையா இவளுக்கு... மார்க்குகளை வைத்துத்தான் புத்திசாலித்தனம் தீர்மானிக்கப்படுகிறது. குறைவான மார்க்கு அவமானம் என்று குழந்தைகளுக்குப் போதிக்கப்பட்டிருக்கிறது. இவள் அவமானம் என்று இன்னும் சுருங்கிப் போய் விட மாட்டாளா? சிரமமில்லையா அது...'' பானுமதி கவலையுடன் பேசினாள்.

(தொடரும்)

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

மேலும் ஆங்கிலத்தில் பேச
வேண்டும் என்ற எனது நீண்ட
நாளைய விருப்பம் உங்களது
பயிற்சியின் மூலம் நிறைவேறும்
என நம்புகிறேன். எனவே
முன் கண்ட எனது முகவரிக்கு
இப் பயிற்சி பற்றிய தகவல்
பத்திரத்தையும் விண்ணப்ப
மனுவையும் அனுப்புமாறு
வேண்டுகிறேன்.

இப்படிக்கு
எம். வளர்மதி
மாரிக்கம்பட்டி.

விவேகானந்தா கல்வி நிலையம்
9 மேட்லி ரோடு
தி. நகர்
சென்னை.
PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத்திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடையாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண்டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதிலளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல்களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற்கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர்கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA

போட்டிக் கதை — 9

# பேசும் பொம்மைகள்

"அடுத்த நிகழ்ச்சி சில வினாடிகளில் தொடரும்."

வித்யாவின் கண்களில் ஆர்வம் பனிச் சிட்டது. வானொலிப் பெட்டியின் ஒலியளவைச் சற்று கூட்டினாள்.

அறிவிப்பைத் தொடர்ந்து, 'சக்தியைப் போற்றுவோம்' என்ற தலைப்பில், பதினைந்து நிமிடங்கள் சங்க இலக்கியத்திலிருந்தும், நவீன இலக்கியத்திலிருந்தும் பல்வேறு எடுத்துக்காட்டுகளைத் தகுந்த இடங்களில் இணைத்து, பெண்களைப் பற்றியும் அவர்களுக்குள்ள உரிமைகள் — கடமைகள் பற்றியும் பேசினான் ரகுராமன்.

ஒலிப்பதிவு செய்யப்பட்ட நிகழ்ச்சிதான் என்றாலும், அவனே தனக்கு முன் நின்று பேசுவது போல் எண்ணினாள் வித்யா. எழுதிப் படித்த உரைதான். ஆனாலும், குரலில் அந்தந்த இடத்துக்கு ஏற்ப ஏற்ற இறக்கம் கொடுத்து எவ்வளவு அழகாகப் படித்தான்! அதுவும் பேச்சு முழுதும் ஆண்மையின் கம்பீரம் முற்றிலுமாக ஆக்கிரமித்திருந்தது.

இரண்டு அஞ்சலட்டைகளை எடுத்தாள். ஒன்று அவனுக்கு. மற்றொன்று வானொலி நிலையத்துக்கு. அவனுடைய அந்தச் சிற்றுரையைப் பாராட்டி ஓர் இரண்டு வரிக் கடிதம். நாளை காலை அஞ்சலில் சேர்த்துவிட வேண்டும்.

"ராம் இன்னைக்கு ரேடியோவில பேசினார்..." — சாப்பிடுகையில் வித்யா சொன்னாள்.

"ஓ...! எப்படியிருந்தது...?"

'அழகாக இருந்தது, நன்றாக இருந்தது, பிரமாதம், அற்புதம்' என்று எப்படி எப்படியோ சொல்லலாம். இருந்தாலும் என்ன சொல்வதென்று சற்று நேரம் யோசித்தாள். பிறகு, "ம்..." என்று ஒற்றைச் சொல்லோடு நிறுத்தினாள்.

"ரமணியைப் பார்த்தேன்..."

சட்டென்று பேச்சைத் திசை மாற்றினார் தியாகராஜன் — அவர்தான் அப்பா. "உன்னை வரும் முதல் தேதியிலிருந்து வேலைக்கு வரச் சொல்லி விட்டார்..."

**விநோதானந்த்**

மகிழ்ச்சியான செய்திதான்.

"சம்பளம் எவ்வளவு தருவாங்க...?"

"அதெல்லாம் நான் பார்த்துக்கறேன்னு சொல்லிட்டான்..."

இனிய நினைவுகளோடு அன்றைய இரவு அமைதியாகத் தூங்கினாள் வித்யா.

"'சூதர் சபைதனிலே தொல்சீர் மறக்குலத்து மாதர் வருதல் மரபோடா! யார் பணியால் என்னை அழைக்கின்றாய்?' என்றாள். அதற்கவனும் 'மன்னன் சுயோதனன் வார்த்தையினால்' என்றிட்டான்."

பாரதியின் பாஞ்சாலியின் சபதச் செய்யுளை மாணவர்களுக்கு உணர்ச்சி பொங்கப் படித்துக் காட்டிப் பொருளுரைத்துக் கொண்டிருந்த வேளையில் அடுத்த வகுப்புக்கான மணியடித்தது.

"மீதியை நாளைக்குப் பார்த்துக்கலாம்..."

வகுப்பை விட்டு வெளியே வந்தான் ரகுராமன். அவனுடைய ரசனைக்கும் ஆர்வத்





துக்கும் ஏற்ற வகையில் அந்த மேநிலைப் பள்ளியில் தமிழாசிரியர் பணி அவனுக்கு.

''கொஞ்சம் முந்தி போன் வந்திச்சு. நம்பர் கொடுத்திருக்காங்க...''

பள்ளி அலுவலக ஊழியர் ஒரு துண்டுச் சீட்டை அவனிடம் தந்தார்.

தொலைபேசி எண்ணைப் பார்த்தான். முகத்தில் ஒரு மலர்ச்சி.

எண்களைச் சுழற்றினான். மறுமுனை கனிவாகக் குரல் கொடுத்தது. ''வித்யா'' என்றது.

''வணக்கம் மதிப்பிற்குரிய டெலிபோன் ஆபரேட்டர் அவர்களே...!''

''சக்தியை நீங்கள் போற்றலாம். அதற்காக இவ்வளவு ஆர்ப்பாட்டமான மரியாதை தேவையில்லை.''

''வாழ்த்துக்கள்...''

''நன்றி...''

''ட்ரீட் உண்டா...?''

''வீட்டுக்கு வாங்க. பாகற்காய்ப் பொரியல், வேப்பம்பூ ரசம், இஞ்சித் துவையல், மோருக்குத் தொட்டுக் கொள்ள உப்பு நாரத்தங்காய்த் துண்டம்...!''

''ஸாரி! ராங் நம்பர்...''

''ஐயய்யோ... போனை வச்சிடாதீங்க... விளையாட்டுக்குச் சொன்னேன்...''

இரு முனைகளிலிருந்தும் சிரிப்புக் கிளம்பிச் சங்கமித்தது.

இலையைக் கழுவிப் போட்டு அதில் இட்லியைச் சுடச் சுடக் கொண்டு வந்து வைத்தாள் ஜானகி. தொட்டுக் கொள்ள கொத்சு.

கலைத்துச் சாப்பிட்டார் தியாகராஜன்.

''ரமணி போன் பண்ணான்'' என்றார்.

ஜானகி அவர் முகத்தையே பார்த்தாள்.

''வித்யாவை அவனுக்கு ரொம்பவும் பிடிச்சுப் போச்சு.. ஆபீஸ் வேலையில ரொம்பவும் கெட்டிக்காரியா இருக்காளாம். முகம் சிணுங்காம வேலை பார்க்கறாளாம்...''

கேட்பதற்குப் பெருமையாகத்தான் இருந்தது.

''அவருடைய தம்பி பிள்ளை வடக்கே நல்ல உத்தியோகத்துல இருக்கானாம். வித்யாவை அவனுக்குக் கல்யாணம் பண்ணி வச்சிடலாம்னு அபிப்ராயப்படறான்..''

''அப்ப...?''

அவனுடைய கேள்வியின் பொருள் அவருக்குப் புரிந்தது.

''நல்ல இடம். அந்தப் பையனுக்கு இப்பவே கார், பங்களான்னு இருக்கு. போகப் போக இன்னும் வசதி கூடும்.

அப்படியிருக்கறப்ப தானாக வருகிற சந்தர்ப்பத்தை எதற்காக உதறணும்...?''

''இதுல வித்யாவோட அபிப்ராயத்தைக் கேட்க வேண்டாமா...?''

''எதுக்குக் கேட்கணும்? அவளோட நல்ல எதிர்காலத்துக்காகத்தானே இவ்வளவு முயற்சியும்...?''

ஜானகி அதற்கு மேல் எதுவும் பேசவில்லை. வித்யா வரட்டும் எனக் காத்திருந்தாள்.

அன்றைய தபாலில் வந்திருந்த கடிதங்களைப் படித்துக் கொண்டிருந்தார் ரமணி. இரண்டு மூன்று ஆர்டர்கள். ஏற்கெனவே அனுப்பி வைத்த பொருள்களுக்கான காசோலைகள். விலைப்பட்டியல் கேட்டுச் சில கடிதங்கள்.

பொறுமையாகப் படித்தார்.

ஒருசில கடிதங்களுக்கு உடனே பதில் எழுத வேண்டும்.

அழைப்பு மணிக் குமிழில் விரல்களைக் கொண்டு செல்கையில் தள்ளு கதவு திறந்தது.

வித்யா!

''வா...''

அவள் தந்த அந்தக் காகிதத்தைப் பிரித்துப் படித்தார். இமைகள் இனம் காண முடியாமல் விரிந்தன.

''எதற்காக வேலையை ராஜினாமாச் செய்யணும்...?''

பேசாமல் நின்றாள்.

''அந்தப் பையனைக் கல்யாணம் செஞ்சுக்க உனக்கு இஷ்டமில்லே. அவ்வளவுதானே...?''

பேசாமல் நின்றாள்.

''உன் அப்பாவுக்குத் தெரியுமா...?''

''தெரியாது...''

''நீ சொல்லலியா...?''

''அவரோட எதிர்பார்ப்புகளே வேற. அதுவுமில்லாம என் அப்பா ஒரு தர்க்கவாதி...''

''உனக்கு விருப்பமில்லேன்னா அப்படியே விட்டிடலாம். அதுக்காக வேலையை ஏன் விடணும்...?''

''இந்த விஷயத்துல நான் முரண்பட்டு நடந்துக்கிட்டா, சமயத்துல வேலை போட்டுக் கொடுத்த உங்களுக்குச் செய்யற துரோகம்னு அப்பா நெனைக்கிறார்...''

''அவரோட கணக்கே தப்பும்மா. அந்த என் தம்பி பிள்ளைன்னே இல்லே. என் மனைவி, குழந்தைகள், கூடப் பிறந்தவங்க எல்லாருமே இந்த ஆபீசுக்கு வெளியில தான். தவறான ஒரு முடிச்சு காலாகாலத்துக்கும் தொல்லைங்கறதை நான் உணர்ந்திருக்கேன்...''

அவள் கண்கள் கலங்கின.

''ப்ளீஸ், இது ஆபீஸ். யாரும் பார்த்தாத் தவறா நெனைக்கலாம். இந்த ராஜினாமாக் கடிதத்தை உன் கையாலேயே கிழிச்சுப் போடு. போய் உன் ஸீட்டுல உட்கார்ந்துக்க...''

கடிதத்தை திரும்பப் பெற்றுக் கொண்டு அவள் மௌனமாக இடத்தை விட்டு அகன்றாள்.

''ரகுராம்! இப்ப உனக்கு எவ்வளவு சம்பளம்...?''

தியாகராஜன் கேட்டார். சொன்னான்.

''இன்னும் பத்து வருஷம் கழிச்சு எவ்வளவு வரும்...?''

தோராயமாகக் கணக்குப் போட்டுச் சொன்னான்.

''அதுக்கப்புறம் இன்னும் ஒரு பத்து வருஷம் போனா நீ ரிடையராயிடுவே. அப்ப உனக்கு எவ்வளவு கையில கிடைக்கும்? பென்ஷன் எவ்வளவு வரும்...?''

அந்தக் கணக்குக்கு விடை சொல்லாமல் அவரையே பார்த்தான்.

''இப்ப அவளைத் தேடி வந்திருக்கிற இடம் ஒரு சொர்க்கபுரி. மிகைப்படுத்திச் சொல்றேன்னு நெனைக்காதே. ரொம்ப வசதியான இடம்....''

அவருடைய பார்வையை நேருக்கு நேர் சந்திக்க விருப்பமில்லாமலோ அல்லது தயக்கத்தின் காரணமாகவோ அவன் தலையை உயர்த்திச் சுவரை வெறித்தான். அங்கே ஒரு புகைப்படத்தில் வித்யா தன் தாய், தந்தையர், உடன் பிறந்தவர்களோடு சிரித்தவாறு காட்சியளித்துக் கொண்டிருந்தாள்.

''அவளுடைய வாழ்க்கையில நீ குறுக்கிடாம இருந்தா அது உன் பெருந்தன்மையைக் காட்டும். ஆசிரியரா உத்தியோகம் பார்க்கறே. எவ்வளவோ கட்டுரைகள் எழுதறே. பேசறே. அதனால உனக்கு அதிகம் சொல்ல வேண்டாம்னு நெனைக்கிறேன். இதைச் சொல்லத்தான் நான் உன்னை இங்கே வரச் சொன்னது...''

இவ்வளவு நேரமும் அந்த உரையாடலை மறைந்திருந்து செவிமடுத்துக் கொண்டிருந்த ஜானகி வெளியே வந்த போது அவன் தெரு விறங்கி நடந்து கொண்டிருந்தான்.

இடைவேளை.

ரகுராமனுடன் பேச வேண்டும் போல் தோன்றியது. எண்களைச் சுழற்றினாள். மறுமுனை எதிர்பாராத பதிலைச் சொல்லிற்று.

ரகுராமன் ஒரு மாத விடுப்பில் எங்கோ வெளியூர் சென்றிருக்கிறானாம்.

மாலையில் அலுவல் முடிந்து வீடு திரும்பு முன் வழியில் இறங்கி அவன் இருப்பிடத்தை அடைந்த போதும் அதே பதில்தான்.

வீட்டுக்கு வந்த போது தம்பி தங்கைகள் படித்துக் கொண்டிருந்தார்கள். ஜானகி ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்

கணவன்: அட, அம்மா உனக்கு லெட்டர் போட்டிருக்காளா; என்ன விசேஷம்?

மனைவி: 'புதன்கிழமை காலையிலே வந்துடுவேன். சண்டைக்குத் தயாரா இரு'ன்னு எழுதியிருக்காங்க!

— வலங்கை ஜி. ராஜசேகர்.



டிருந்தாள். தியாகராஜன் இன்னும் வரவில்லை என்பது புரிந்தது.

''என் இவ்வளவு நேரம்...?''

அந்தக் கேள்வி அவளை நிலைகுலைய வைத்தது. கைப்பையை மேசை மீது எறிந்துவிட்டு அம்மாவின் மடியில் சென்று விழுந்தாள். உடல் குலுங்கிற்று.

''வித்யா! என்ன ஆச்சு உனக்கு...?''

முதுகைப் பரிவோடு தடவிக் கொடுத்தாள்.

''ராம் ஒரு மாச லீவுல எங்கேயோ வெளியூர் போயிருக்காராம்...''

''அவன் வீட்டுக்குப் போனியா...?''

தலையசைத்தாள்.

''அவனாப் போகலேடி. அவனைக் கூப்பிட்டு உட்கார வச்சு, உன் அப்பா பேசின பேச்சுத்தான் அவனை ஊரை விட்டே துரத்தியிருக்கு. வெளியூரிலே தங்கிடப் போறானா என்ன? லீவ் முடிந்ததும் தானா வருவான்... ம். வந்துதான் என்ன பிரயோஜனம்...?''

ஆறுதலாக ஆரம்பித்துக் கடைசியில் வித்யாவின் துயரத்தைக் கூட்டுவது போல் அமைந்தது ஜானகியின் பேச்சு.

எட்டு மணி சுமாருக்குத் தியாகராஜன் வீடு வந்த போது அவர் முகம் சோர்ந்திருந்தது. அலுவலகத்தில் வேலை மிகுதியோ என ஜானகி நினைத்தாள்.

''வந்த வரன் கைநழுவிப் போச்சு...''

சுருக்கமாகச் சொன்னார்.

''பையன் தன் ஆபீசில வேலை பார்க்கிற ஒரு பெண்ணை விரும்பறானாம். அவளைத்தான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு பிடிவாதமாச் சொல்லிட்டான். என் தம்பி லெட்டர் போட்டிருக்கான்...''

ரமணி சொன்னது பொய். வித்யாவுக்கு ஆதரவாகச் சொல்லப்பட்ட பொய்.

ஒரு மௌன யுத்தம் அங்கே நிகழ்ந்து கொண்டிருந்தது. தியாகராஜன் அதற்குப் பிறகு எவருடனும் பேசாமல் உணவை முடித்துக் கொண்ட பின் கட்டிலில் வந்து படுத்தார்.

தன் திட்டங்கள், எதிர்பார்ப்புகள் எல்லாம் இப்படித் தறிகெட்டு ஓடி விபத்துக்கு உள்ளாகும் என அவர் எதிர்பார்க்கவில்லை.

ரகுராமனை ஒரு மாதம் விடுப்பு எடுத்துக் கொண்டு வித்யாவின் பார்வையில் படாமல் இருக்கும்படி கேட்டுக் கொண்டவரே அவர்தானே!

தன் ஒவ்வொரு பேச்சுக்கும் மறு வார்த்தை சொல்லாமல் சாவி கொடுத்த பொம்மையாய் இயங்கிய அவன் இப்போது எங்கிருப்பான்?

பலவாறும் யோசிக்கையில், ஒரு பெரிய தவறைச் செய்து விட்ட உணர்வு அவர் உள்ளத்தில் நெருடியது.

மனத்துக்குள் ஒரு கசப்புணர்வு படர்ந்தது வித்யாவுக்கு.

இன்னும் சில நாட்கள் கழித்து ரகுராமன் ஊர் திரும்புவான். அவளுக்குத் திருமணம் நிச்சயமாகியிருக்கும் என்ற நினைப்புடன் வருவான்.

தியாகராஜனின் விரலசைப்பிற்கும், கண்ணசைவிற்கும், வார்த்தைச் சொடுக்கல்களுக்கும் ஒரு பொம்மையாய் இயங்கும் அவனை எந்த ரகத்தில் சேர்ப்பது?

''ரகுராம்!

''சங்க இலக்கியமும், நவீன இலக்கியமும் படித்ததும், சக்தியைப் போற்றுவதாகச் சொற்சிலம்பம் ஆடியதும் உங்கள் அதிகப்படி வருவாய்க்குத் துணையாகலாம். சொற்களில் நீங்கள் காட்டும் வீரமும், துணிவும் உங்கள் நிஜ வாழ்க்கையைப் பொறுத்த வரையில் ஒருவித மாயத் தோற்றமே! சுயமாகச் சிந்தித்துச் சுயமாக முடிவெடுக்கத் தெரியாமல் என் அப்பாவின் பேச்சைக் கட்டளையாக ஏற்று ஒரு தாற்காலிக விலகலை உருவாக்கிக் கொண்ட நீங்கள்...''

கடிதம் வளர்ந்து கொண்டிருந்தது அவள் வயதைப் போல்.

ஒரு மாத விடுப்பு முடிந்து ஊர் திரும்பியதும் சுகமாய் அறையினுள் வெறும் தரையில் உறங்கிக் கொண்டிருந்த வித்யாவின் கடிதத்தைத் தட்டியெழுப்பிப் படித்தவன் மறுநாள் அவளைத் தொலைபேசியில் அழைத்த போது —

''ஸாரி! ராங் நம்பர்...''

பட்டென்று ஒலிவாங்கியைக் கீழே வைத்தாள் வித்யா!

வலிகளிலிருந்து நிவாரணம் பெற இப்போது நான் இதையே நம்புகிறேன். ஜலதோஷம், உடல்வலி, தலைவலிக்கு நம்பகமான நிவாரணி — ஸ்பிக்பாம்.



ஸ்பிக்பாம்

மென்தால், நீலகிரித் தைலம், கற்பூரம், மீதைல் சாலிஸிலேட் கொண்ட சக்தி வாய்ந்த வலிநிவாரணி.




**SPIC**

ஸதர்ன் பெட்ரோகெமிகல்
இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பொரேஷன் லிமிடெட்
ஃபார்மசூடிகல் டிவிஷன்,
92, G.N. செட்டி ரோடு, சென்னை-17.

PROFAD/SPIC/319/89/TAM



# தனலட்சுமி வருகிறாள்; வரவேற்புச் சொல்லுங்கள்!



**—உங்கள் செல்வம் பெருக உருப்படியான யோசனைகள்**




வளமான வாழ்வுக்கும், வசதியான வாழ்க்கைக்கும், செல்வம் அவசியம் தேவை என்பதில் இருவிதக் கருத்துக்கள் இருக்க முடியாது. 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்றார் வள்ளுவர்.

'மூட்டாள் வீணாக்குகிறான்; மூடன் குழப்பிக் கொள்கிறான். ஆனால் புத்திசாலி மனிதன் மட்டும்தான் சேமிக்கிறான். எத்தனை சேமிக்கிறானோ, அத்தனைக்குப் பேசப்படுகிறான்' என்று ருட்யார்ட் கிப்ளிங் ஒரு கவிதையே பாடியிருக்கிறார்.

சம்பாதிக்கத் தெரிந்தால் மட்டும் போதாது; சேமிக்கத் தெரிய வேண்டும். அந்தச் சேமிப்பும், மேலும் சம்பாத்தியம் தருவதாக இருக்க வேண்டும்.

எப்படி?

**திட்டமிடுதல்:**

'பணம் படுத்தும் பாடு' என்று ஒரு பழைய சினிமா. (பழசானதால் டீ. வி. யில் நிச்சயம் பார்த்திருக்கலாம்!) கதாநாயகன், கையிலிருந்து எப்படியாவது பணம் போனால் சரி என்று ரேசிலும், ஷேர் மார்க்கெட்டிலும் கொண்டு போய்ப் பணத்தைக் கட்டுவான். ஆனால் அது பல மடங்காக அவனுக்கே திரும்பி வந்து அவனை விழிக்க வைக்கும்.

இதெல்லாம் சினிமாவிலும், கதையிலும்தான் நடக்கும். நிஜ வாழ்க்கையில் எத்தனை வந்தாலும் 'செலவுக்கே சரியாக இருக்கிறது, சேமிக்க எங்கே மீதி இருக்கிறது' என்று கேட்பவர்தாம் அதிகம்.

ஆனால் எதையும் 'பாஸிடிவ்'வாகப் பார்ப்பவர்கள், திட்டமிடுதல் என்கிற அடிப்படைத் தத்துவத்துக்கு முதலிடமும் முக்கியத்துவமும் கொடுக்கிறார்கள்.

இருபத்தைந்து வயதில் ஒருவருக்கு வேலை கிடைக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். (அட, ஒரு பேச்சுக்கு வைத்துக் கொள்ளுவோமே!) இந்த 25 முதல், ரிடையராகும் 65 வரை எப்படித் திட்டமிட வேண்டும் என்று மார்லிஸ் ஹாரிஸ் ஓர் அட்டவணையே தயாரித்திருக்கிறார்:

**25 முதல் 34 வயது வரை (குழந்தைகள் ஏதும் இல்லாமல்):**

| என்ன செய்ய வேண்டும்? | எப்படிச் செய்ய வேண்டும்? |
|---|---|
| 1. தவணை முறையைப் பயன்படுத்துங்கள்: | தவணை முறை இருக்கிறதே என்பதால் தேவைகளை அதிகரித்துக் கொள்ளாதீர்கள். மிக அவசியமானதை மட்டும் வாங்கி மாதா மாதம் ஒழுங்காகக் கட்டிவிடுங்கள். |
| 2. வீடு அல்லது ஃபிளாட் வாங்குங்கள்: | இதற்குக் குறைந்த வட்டியில் பணம் தரும் எல். ஐ. சி. போன்ற நிறுவனங்களைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். |
| 3. அவசரத் தேவைக்கு நிதி ஒதுக்குங்கள்: | இதைக் குறைந்த கால ஃபிக்ஸெட் டெபாஸிட்டில் போட்டு வைக்கலாம். சேமிப்புக் கணக்கை விட வட்டி கூடுதல். |
| 4. போதுமான அளவு இன்ஷூரன்ஸ் எடுங்கள்: | இதனை வீடு அல்லது ஃபிளாட் வாங்குவதுடன் இணைத்துக் கொள்ளலாம். |
| 5. முதலீடுகளில் முயற்சி செய்யுங்கள்: | நல்ல டிவிடெண்ட் தரும் கம்பெனி பங்குகளை வாங்கலாம். புதிய வெளியீடுகளின் பத்து ரூபாய் பங்கு பத்து ரூபாய்க்கே கிடைக்கும். ஆனால் மார்க்கெட்டில் சீக்கிரமே அதன் மதிப்பு உயரும். |

| | |
|---|---|
| 6. ரிடையரானால் என்ன செய்வது? யோசியுங்கள். | ரிடையர்மென்ட்திட்டத்தில்முதலடி எடுத்து வையுங்கள். |

**குழந்தைகள் இருந்தால்....**

மேற்சொன்ன திட்டங்களோடு —

| | |
|---|---|
| 1. இன்ஷ்யூரன்ஸ் அதிகம் எடுத்துக் கொள்ளுங்கள். | ஒவ்வொரு குழந்தை பிறக்கும் போதும் அவசியம் புது இன்ஷ்யூரன்ஸ் செய்து விடுங்கள். பாலிஸி குழந்தைபேரில்இருந்தாலும்உங்கள் ப்ரீமியத்துக்கு வருமான வரிவிலக்கு உண்டு. |
| 2. குழந்தைகளின் கல்விக்காகத் தனியே சேமியுங்கள். | கல்விக்காக, நீண்ட நாளையச் சேமிப்பு தொடங்குங்கள். |

**35 முதல் 44 வயது வரை:**

| | |
|---|---|
| 1. வீட்டை இன்ஷ்யூர் செய்யுங்கள். | கார், ஸ்கூட்டர் எதையுமே விபத்துப்பாதுகாப்பு இன்ஷ்யூரன்ஸ்செய்யுங்கள். |
| 2. அதிகரிக்கும் வருமானத்துக்கு அதிகபட்ச வரி விலக்குகள் கிடைக்க என்ன செய்லாம்? யோசியுங்கள். | மருத்துவச் செலவுக்கான இன்ஷ்யூரன்ஸ் எடுத்துக் கொள்ளுங்கள். வரிவிலக்கு அளிக்கும் முதலீடுகள், பின்னால் எப்போதாவது வரி கட்டுகிற அனுகூலம் உள்ள சேமிப்பில் முதலீடு செய்யுங்கள். |

**45 முதல் 54 வயது வரை:**

| | |
|---|---|
| 1. ரிடையர்மென்ட்டை மனத்தில் கொண்டு, தொடர்ந்து சேமியுங்கள். | முடிந்தால், ரிட்டையர்மென்ட் சேமிப்புத் தொகையை அதகரிக்கச் செய்யுங்கள். |
| 2. வரி விலக்கு அளிக்கும் சேமிப்புகள் இருக்கிறதா என்று பாருங்கள். | நீண்ட நாள் முதலீட்டுத் திட்டங்களில் வரிவிலக்கு நிச்சயம் இருக்கும். தேடி வாங்குங்கள். |
| குழந்தைகள் இருந்தால் — | அவர்களுக்கு ஏதானும் வருமானம் கிடைக்கிற மாதிரி சொத்தோ, முதலீடோ செய்யுங்கள். |

**55 முதல் 64 வயது வரை:**

| | |
|---|---|
| 1. ஓய்வு நாளைத் திட்டமிடுங்கள். | ஓய்வுபெற்ற பிறகு நிம்மதியாக வாழ்க்கை நடத்தப் போதுமான வரவுக்கு வழி செய்து கொள்ளுங்கள். |
| 2. என்னவெல்லாம் சேமித்திருக்கிறோம் என்று சிந்தியுங்கள். | வீட்டை விற்று, ஃப்ளாட்டில் முதலீடு செய்தால் கையில் பணமும், இருக்க இடமும் கிடைக்கும். செய்ய முடியுமா என்று பாருங்கள். |

**65 வயதுக்கு அப்புறம்?**

மாதா மாதம் ஒழுங்காக வருவாய் கிடைக்கிற நம்பகமான முதலீடுகளில் உங்கள் பணத்தைப் போடுங்கள். மருத்துவ இன்ஷ்யூரன்ஸ் தொடர்ந்து இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள்.

இவை எல்லாமே, தொடர்ந்து சம்பளம் அல்லது வருமானம் உள்ள நபர்களை மனத்தில் வைத்துச் சொல்லப்பட்ட யோசனைகள். 'யாரிடம் பணம் இருக்கிறது?' என்று காலை மடித்துக் கொண்டு உட்கார்ந்து, காதைக் குடைகிறவர்களை, இதோ ஒரு ஜோக் சொல்லித்



தூண்டலாம்:

"பத்துக் காசு போடு, ஐயா!"

"காசும் இல்லே, ஒண்ணும் இல்லே, போ!"

"ஒரு வாய்ச் சோறு போடுங்களேன்!"

"சோறும் இல்லே, ஒண்ணும் இல்லே, போ!"

"ஒரு சட்டையானும் குடு போட்டுக்க!"

"சட்டையுமில்லே, ஒண்ணும் இல்லே, போ!"

"ஒண்ணும் இல்லே இல்லேன்னு ஏன் அங்கே திண்ணையிலே உட்கார்ந்திருக்கே சாமி, வா எம் பின்னால!"

'இல்லை' என்பதே எதிர்மறையான எண்ணத்தின் சொல் வடிவம் தான். உதறுங்கள் அதை.

சிலருக்குச் சிக்கனம் கைகொடுக்கும்; சேமிப்புக்கு.

சிலருக்குத் திட்டமிடுதல் கைகொடுக்கும்.

இன்னும் சிலருக்கு உழைப்பு கைகொடுக்கும்.

வேறு சிலருக்கோ அதிர்ஷ்டம் கைகொடுக்கும்!

**சிக்கனம்:**

மிகப் பணக்கார விவசாயி ஒருவரைப் பார்க்கச் சென்றார் ஓர் இளைஞர். அவர் எப்படிப் பணக்காரர் ஆனார் என்று அறிந்து கொள்ள, "அது பெரிய கதை..." என்று ஆரம்பித்தார் பணக்காரர். "அதை நான் சொல்லுகின்ற நேரம் முழுக்க இந்த மெழுகுவர்த்தி எரிய வேண்டுமா என்ன?" என்று ஊதி அணைத்து விட்டார். "மேற்கொண்டு நீங்கள் எதுவும் சொல்லத் தேவையில்லை!" என்று எழுந்து கொண்டார் இளைஞர்.

ஊதாரித்தனமாக வேண்டியதற்கும், வேண்டாததற்கும் வாரிச் செலவழித்துவிட்டு, அவசரத்திற்குப் பிறர் கையை எதிர்நோக்கி இருப்பவர்கள் இதைப் படித்தாவது திருந்தினால் நல்லது. சேமிப்புக்கு வழி சிக்கனம். சேமிப்பு + முதலீட்டில் புத்திசாலித்தனம் = செல்வம்.

**திட்டம்:**

மாதந்தோறும் ஆகும் செலவினங்களுக்கு ஒதுக்கியது போக, மீதியை சேமிப்புக்கு என்று வைத்து விடுபவர்கள் ஒரு ரகம். முதலில் சேமிப்புக்கு இத்தனை என்று ஒதுக்கி விட்டுத்தான் மேற்கொண்டு செலவழிப்பது என்று தீவிரமாய்ச் சேமிப்பாளர்கள் இன்னொரு ரகம். இரண்டாவது ரகத்தினர்தான் வெற்றிகரமாகச் செயல்பட்டு வாழ்க்கையில் வேகமாக முன்னேறுகிறார்கள்.





**உழைப்பு:**

அருமையான வீடு ஒன்றைக் கட்டினார் ஒரு நண்பர். கீழே வாடகைக்கு விட்டார். காலை ஏழரை மணிக்கே சைக்கிளை எடுத்துக் கொண்டு வேலைக்குப் போய்விடுவார், ஒன்பதரை ஆபீசுக்கு. மழை பிரளயமாகக் கொட்டினாலும் அவருக்குக் கவலை இல்லை; ஆபீசுக்கு லீவு போட மாட்டார். மாலை வர நேரமாகும். வந்ததும், உணவை முடித்துக் கொள்ளுவார். தமது அறையிலுள்ள டைப்ரைட்டர் முன்னே உட்கார்ந்தாரானால் இரவு ஒரு மணி, இரண்டு மணி வரை ஓயாமல் மளமளவென்று டைப் அடித்துத் தள்ளுவார். மறுபடி காலை ஏழரை மணிக்குச் சைக்கிளில் ஏறி, ஆபீசுக்குப் புறப்பட்டு விடுவார்!

குடியிருந்தவர் ஒரு நாள் வியந்து போய்க் கேட்டார்: "ஏன் சார், ஆபீசுக்குத்தான் ஒழுங்காகப் போய் வருகிறீர்கள். அதுவும் இரண்டு மணி நேரம் முன்னாலேயே! மறுபடி இரவு என்ன அத்தனை நேரம் டைப் செய்கிறீர்கள்?"

நண்பர் புன்னகை செய்தார். "காலையில் சீக்கிரம் சென்றால் ஓவர் டைம் கிடைக்கிறது. மாலையில் ஒரு வக்கீலிடம் வேலை பார்க்கிறேன். அவர் கொடுக்கும் பத்திரங்களை இரவில் இங்கே அடித்து முடிக்கிறேன்..."

"சரி. எதற்கு இப்படிக் கிடந்து...?"

"நீங்கள் கேட்பது நியாயம்தான். இந்த வீட்டைப் பார்த்தீர்களா? வாடகை வீட்டில் குடியிருந்து வந்தபோது, எனது மனைவியும், தாயாரும் "நமக்கென்று ஒரு அழகான வீடு இருந்தால், நிம்மதிக்கு நிம்மதி.

குழந்தைகளுக்குச் சொத்து. இல்லையா?'' என்று கேட்டார்கள். நான் யோசித்தேன். என்னிடம் மூலதனம் குறைவு. ஆனால் உழைப்புக்கு அஞ்சாதவன் நான். என்னுடைய நேர்மைக்கு யாரும் பணம் கொடுத்து உதவுவார்கள். கடனை அடைக்க, வாடகைக்கு ஒரு பகுதியை விடுவதும் ஒரு வழி. வீட்டை இதோ கட்டி முடித்து விட்டேன். உழைப்பின் மூலம் கிடைக்கும் உபரி வருமானத்தைக் கொண்டு கடனையும் அடைத்து வருகிறேன். சுமை குறையக் குறையச் சுகம் கூடிக் கொண்டே வருகிறது!' என்றார் நண்பர்.

இது கட்டுக் கதை அல்ல. உண்மைக் கதை.

உழைப்பும், அதற்குரிய சன்மானமும் கூடுதலான சக்தியை — அதாவது பொருளாதாரச் சக்தியைக் கொடுக்கின்றன. மூலதனம் குறைவாக இருக்கிறதே, எப்படிச் சமாளிக்கப் போகிறோம் என்று தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தால் ரொம்ப நேரம் கழித்து ஒன்று தலைவலிக்கும், இல்லை கை வலிக்கும்!

ஐசக் மெரிட் சிங்கர், நாற்பது டாலர்களைக் கடனாகப் பெற்று மூலதனமாகப் போட்டுத்தான் 1850 — இல் தாம் கண்டுபிடித்த தையல் யந்திரத்தை உற்பத்தி செய்து விற்பனைக்குக் கொண்டு வந்தார்.

பதின்மூன்றாயிரத்தைந்நூறு டாலர்களைக் கடனாகப் பெற்றுத்தான் குட் இயர் டயர் கம்பெனியைத் தொடங்கினார் பிராங்க் சீபர்லிங்.

சாதிக்க முடியும் என்று உறுதி பூண்டவர்கள்தான் சாதனையாளர்களாக முடியும்.

'ஓர் அவுன்ஸ் தங்கம் கிடைக்க இரண்டு டன் பாறை வெட்டி எடுக்க வேண்டியிருக்கிறது' என்று ஒரு தென் ஆப்பிரிக்கப் பழமொழி உண்டு.

உழைப்புக்குப் பலன் உண்டு. நம்பிச் செயல்படுங்கள்.






**அதிர்ஷ்டம்:**

வாய்ப்பைச் சரியாகப் பயன்படுத்துகிறவனைப் பார்த்துத்தான் அதிர்ஷ்ட தேவதை புன்னகை செய்வாள் என்று சொல்லுவதுண்டு. வாய்ப்பு எப்போது வரும் என்று காத்திராமல், அதைத் தேடிச் செல்லுபவரும் உண்டு. வாய்ப்புக் கிடைத்ததும், அதைச் செயல்படுத்தி வெற்றி காணத் தெரிய வேண்டும். நல்ல சீட்டு கையில் வைத்திருந்தால் மட்டும் போதாது; அதைச் சமயத்தில் இறக்கத் தெரிய வேண்டும் என்பார்கள். வாய்ப்பை நம்பிப் பயன்படுத்துங்கள். அதிர்ஷ்டம் பின்னோடே வந்து கதவைத் தட்டும்!

## சேமிக்க எத்தனை வகைகள்?

வங்கிகளில் பணத்தைப் போட்டு வைப்பது வழக்கமான சேமிப்பு.

பலவிதமான பாலிஸிகள் எடுத்து, ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் மூலமாகச் சேமிப்பது.

யூனிட் டிரஸ்ட், நேஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட், நேஷனல் சேவிங்ஸ் ஸ்கீம்' முதலிய அரசாங்கச் சேமிப்புத் திட்டங்கள், பங்குகள் மூலம் சேமிப்பது.

பொதுத் துறை நிறுவனங்கள் அறிவிக்கும் பாண்டுப் பத்திரங்கள் மூலம் சேமிப்பது; அவற்றில் டெபாஸிட் செய்வது.

உறுதியான — நம்பகமான தனியார் நிதி நிறுவனங்களில் டெபாஸிட் செய்து சேமிப்பது. தனியார் நிறுவனங்களில் முதலீடு செய்வது. பங்கு மார்க்கெட்டில் ஷேர்கள் வாங்குவது — இவை ஒவ்வொன்றிலும் அனுகூலமும் உண்டு, குறைபாடுகளும் உண்டு. எவை நமக்கு ஏற்றது என்று யோசித்து அவற்றை ஏற்க வேண்டும். எல்லா முட்டைகளையும் ஒரே கூடையில் வைப்பது ஆபத்து. கூடை விழுந்தால் எல்லாம் நொறுங்கும். இதில் கொஞ்சம் அதில் கொஞ்சம் என்று வைப்பது புத்திசாலித்தனம்.

மத்தியதரக் குடும்பங்களில் இப்போது பிரபலமாகியுள்ள சீட்டுக் கட்டும் பழக்கமும் சேமிக்க ஒரு நிலையான தூண்டுகோல்.




**வங்கிகள்:**

வங்கிகளில் பணத்தைப் போட்டால், இரண்டு வருட டெபாசிட்டுகளுக்கு அதிக பட்சம் பத்து சதவிகித வட்டி கிடைக்கும். ஆனால் இது




பத்திரமானது. வங்கியிலிருந்து கிடைக்கும் வட்டிக்கு வருமான வரிச் சலுகை ஓரளவுக்கு உண்டு.

பல வங்கிகளில் 'கேஷ் சர்ட்டிபிகேட்' என்று இருக்கிறது. நீங்கள் செலுத்துகிற மூவாயிரத்துச் சொச்சம் ரூபாய், பத்து வருடங்களில் பத்தாயிரம் ரூபாயாகத் திரும்ப வரும் திட்டம் இது.

வங்கிகளில் பரவலாக இருந்து வரும் மற்றொரு திட்டம் 'ரெகரிங் டெபாஸிட்' திட்டம். மாதா மாதம் ஒரு குறிப்பிட்ட தொகையை இந்த ஆர். டி. திட்டத்தில் சேமிக்கலாம். பன்னிரண்டு மாதம் முதல், பத்து வருடங்கள் வரை, ரெக்கரிங் டெபாசிட் திட்டத்தில் சேமிப்பது, வட்டியுடன் கணிசமான தொகையாகக் கைக்குக் கிடைக்கும்.

வங்கிகளால் அதிகமான வட்டி தர இயலாது. ஆனால் சிறிதும் 'ரிஸ்க்' எடுக்க விரும்பாத மக்கள், வங்கி டெபாஸிட்டுகளில் பணத்தைப் போட்டுவிட்டு நிம்மதியாக இருக்கிறார்கள்.

**ஆயுள் காப்பீட்டுக் கழகம்:**

வரிகட்ட வேண்டிய நிலையைச் சம்பளம் எட்டிவிடும் போது முதலில் நமக்குத் தோன்றுவது எல். ஐ. சி. பாலிசிதான். ஆயுள் பாதுகாப்பும் இந்தப் பாலிசி மூலம் கிடைத்துவிடுவதால், இதற்கு ஒரு ப்ளஸ் பாயிண்ட் மற்ற சேமிப்புக்களைவிடக் கூடுதலாகக் கிடைத்து விடுகிறது. தப்பித் தவறி நமக்கு ஏதாவது ஆகிவிட்டால் குடும்பம் நிர்க்கதியாக நிற்காது என்ற நிம்மதி பிறக்கிறது.

வேலையில் சேர்ந்த உடனேயே, அதாவது குறைந்த வயதிலேயே, பிரீமியம் தொகை எத்தனை கட்ட முடியும் என்று நிர்ணயித்துக் கொண்டு விட்டால், அதற்குத் தகுந்த தொகைக்குப் பாலிசி எடுத்துக் கொள்ளலாம். குறைந்த வயதிலேயே எடுத்துக் கொள்ளும் போது பாலிசி தொகை கணிசமாக இருக்கும் என்பதோடு, ப்ரீமியம் குறைவாகவே அமையும். மாதாந்திர ப்ரீமியம், காலாண்டு, அரையாண்டு, தவிர வருடாந்திர ப்ரீமியம் என்று எப்படி வசதிப்படுகிறதோ அப்படிச் செலுத்தலாம்.

மாதாந்திர ப்ரீமியம் செலுத்துவோரில், பெரும்பாலானவர்கள் வருமானத்திலேயே நிறுவனத்தினர் பிடித்தம் செய்து எல். ஐ. சி.க்குக் கட்டும் ஏற்பாட்டைத்தான் விரும்புகிறார்கள். 'சேலரி சேவிங்ஸ் ஸ்கீம்' எனப்படும் இந்தத் திட்டம், மாதா மாதம் ப்ரீமியம் அனுப்ப வேண்டுமே என்ற கவலையைச் சுத்தமாக மறக்கடித்து விடுகிறது!

ஆயுள் காப்பீட்டுக் கழகம், பாலிசிதாரருக்கு, வழங்கும் போனஸ் தொகை இப்போதெல்லாம் வருடா வருடம் கூடிக் கொண்டே வருகிறது. முன்பெல்லாம் ஆயிரம் ரூபாய்க்கு, வருடத்தில் முப்பது ரூபாய்க்கும் குறைவாகவே இருந்த போனஸ் தொகை, இந்த ஆண்டு "எண்பது ரூபாயைத் தாண்டி விட்டது! எனவே, பத்தாயிரம் ரூபாய்க்குப் பாலிசி எடுத்தால், பதினைந்து வருடங்களில், பாலிசி முதிர்ந்து நமக்குக் கைக்கு வரும்போது, இரண்டு மடங்குக்கு மேல் தொகை பெருகிக் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது.

காலத்துக்கு ஏற்ற வகையில், புதிது புதிதாகச் சேமிப்புத் துறைகளைக் காண்பதிலும், ஆயுள் காப்பீட்டுக் கழகம் இப்போது முனைந்திருக்கிறது.

'தனாஸ்ரீ' என்ற அதன் புதிய திட்டத்தில் பன்னிரண்டு சதவிகித டிவிடெண்ட் கிடைப்பதாக அறிவித்திருக்கிறது. 'தனாஸ்ரீ' யூனிட் ஒன்றின் மதிப்பு பத்து ரூபாய்தான். குறைந்தபட்ச முதலீடாக ஆயிரம் ரூபாய்க்காவது செய்ய வேண்டும். நவம்பர் 1990 — க்குப் பிறகு (அதாவது ஒரு வருடத்துக்கு அப்புறம்), அந்த யூனிட்டுகளைக் கொடுத்துப் பணமாகப் பெற வேண்டியிருந்தால் தாராளமாகச் செய்து கொள்ளலாம்! இல்லை, இருந்துவிட்டுப் போகட்டும் என்று தீர்மானித்தீர்களானால், வருடா வருடம் டிவிடெண்ட்! இதற்கு வழக்கமான வருமான வரி செல்வ வரிச் சலுகைகளும் உண்டு. இது யூனிட் டிரஸ்ட் போன்றது, கிட்டத்தட்ட.

'தனரக்ஷா' என்ற முதலீட்டில் தொடர்ந்து பணம் சேமித்து வர வேண்டும். இதற்கு ஆயுள் பாதுகாப்பும், விபத்துப் பாதுகாப்பும் உண்டு.

இதே போன்றதுதான் 'தனவிருத்தி' என்ற முதலீட்டுத் திட்டமும். இதற்கு 12 சதவிகித டிவிடெண்ட் உண்டு என்பதோடு, மற்றதைப் போலவே, ஆயுள் மற்றும் விபத்துப் பாதுகாப்புக் கவசம் உண்டு!

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தில் மட்டும் சேர்வது என்று முடிவு எடுத்து விட்டீர்களானால், வீடு தேடி வந்து விவரங்களை விளக்கிச் சொல்லி, பலன்களை எடுத்துக் காட்டி, ஃபாரங்கள் எல்லாம் பூர்த்தி

செய்து, உங்கள் கையெழுத்தையும், ப்ரீமியம் மற்றும் முதலீட்டுத் தொகைக்கான காசோலையையும் பெற்றுச் செல்ல, முகவர்கள் நிறையவே இருக்கிறார்கள்.

ஆனாலும் நீங்களும் யோசித்து எது நமக்கு ஏற்றது என்று முடிவு செய்ய வேண்டியது அவசியம். இல்லையெனில் பின்னால் ஏமாற்றத்துக்கு இடமுண்டு. உதாரணமாக, ப்ரீமியம் குறைவாக இருக்கிறதே என்று ஹோல் லைஃப் பாலிஸி என்ற திட்டத்தில் சேர்த்து விட்டுப் பிறகு வருத்தப்பட்ட பலர் உண்டு. அதில் போனஸ் கிடையாது. ஆயுள் முழுதும் ப்ரீமியம் கட்டிக் கொண்டே இருக்க வேண்டும். எனவே, எந்தச் சேமிப்பானாலும் சாதக பாதகங்களை நன்கு யோசித்துச் செயல்படுவதே நல்லது.

## யூனிட் டிரஸ்ட்:

கையில் கொஞ்சம் பணம் இருக்கிறது. ஷேர் மார்க்கெட்டில் துணிச்சலாய் இறங்கி, நிறுவனங்கள் சிலவற்றின் பங்குகள் வாங்கலாம் என்று ஆசையும் இருக்கிறது. ஆனால் எதில் எதில் வாங்கலாம், எதில் முதலீடு செய்தால் கையைக் கடிக்காமல், கணிசமாக டிவிடெண்ட் கிடைக்கும் என்று தெரியாமல் குழப்பமான நிலையில் தவிப்பவர்க்குச் சமய சஞ்சீவி யூனிட் டிரஸ்ட்.

நாம் பட வேண்டிய கவலையை அவர்களே பட்டுக் கொள்ளுவார்கள். எந்தெந்தப் பங்குகளில் முதலீடு செய்தால் நல்லது என்று நிர்ணயிக்க நிபுணர்களின் அமைப்பு யூனிட் டிரஸ்ட்டுக்கு இருக்கிறது. நாம் வாங்க வேண்டியவை எல்லாம் யூனிட்டுகள் மட்டுமே.

யூனிட் ஸ்கீம் — 64 என்பது 64 — 65 — இல் அறிவிக்கப்பட்ட திட்டம். ஆரம்பித்த புதிதில் ஆறு சதவீதமே டிவிடெண்ட் கொடுத்து வந்த இந்தத் திட்டத்தில், 88 — 89 — இல் பதினெட்டு சதவீதம் டிவிடெண்ட் கொடுக்கப்பட்டிருக்கிறது!

ஓர் அவசரத் தேவை என்றால், வங்கிகளில் யூனிட்டுகளை அடமானம் வைத்துப் பணம் பெற முடியும். .வேறு நபர் பெயரில் மாற்ற வேண்டுமானாலும், மிகச் சுலபமான விதி முறைகளே!

குழந்தைகள் வளர்ச்சி நலத்திட்டம், பெற்றோர் நன்கொடை வளர்ச்சித் திட்டம் இரண்டும் சமீபத்தில் பெரிதும் வரவேற்கப்பட்ட திட்டங்கள். இரண்டிலுமே குறைந்தபட்ச டிவிடெண்ட் தொகை பன்னிரண்டரை சதவீதம். குழந்தைகள் வளர்ச்சி நலத்திட்டத்தில், டிவிடெண்டைத் தவிர, ஒவ்வோர் ஐந்து ஆண்டுகளுக்கும் ஒரு போனஸ் டிவிடெண்டும் உண்டு. ஆறு வருடங்களில் முதலீடு இரண்டு மடங்கு ஆகிவிடும். பெற்றோர் நன்கொடை வளர்ச்சித் திட்டத்தில் ஒரு யூனிட்டின் விலை நூறு ரூபாய். பத்து யூனிட்டுகளாவது குறைந்தபட்சம் வாங்க வேண்டும். இரண்டிலுமே வழக்கமான வருமானவரிச் சலுகை உண்டு.

இவை தவிர, யூனிட் லிங்க்டு இன்ஷ்யூரன்ஸ் திட்டமும் இருக்கிறது. இதில் குறிப்பிடத்தக்க அம்சங்கள் என்று பட்டியல் போட்டாலே ஆறு தேறுகின்றன:

- அதிகபட்ச டிவிடெண்ட்
- முதிர்ச்சி அடைந்தவுடன் போனஸ்
- ஆயுள் பாதுகாப்பு
- விபத்துப் பாதுகாப்பு
- பத்திரமான முதலீடு
- வருமான வரிச் சலுகை

குழந்தைகள் வளர்ச்சி நலத் திட்டத்திலும், பெற்றோர் நன்கொடை வளர்ச்சித் திட்டத்திலும் வெறும் முதலீட்டையும் சேமிப்பையும் மட்டுமே மனத்தில் கொள்ளாமல், பாசப் பிணைப்பையும் வலியுறுத்தி வருவதால், இந்த முதலீட்டுப் பத்திரங்களை அவ்வளவு எளிதில் விற்று விடவோ, மாற்றி விடவோ மனசு வராது! சேமிப்பு நிலைத்து வளரும்!

## வீட்டு வசதி — நிதி கார்ப்பரேஷன்:

**HDFC** எனப்படும் இந்த நிதி நிறுவனம் அரசாங்கத்தைச் சேர்ந்தது அல்ல. ஆனால் கண்ணியமான, திறமைசாலிகளால் மிக வெற்றிகரமாக நிர்வகிக்கப்பட்டு வரும் நிதி நிறுவனம். இதில் முதலீடு செய்வதால் இரண்டு நன்மைகள் இருக்கின்றன. ஒன்று: நியாயமான வட்டி கிடைக்கிறது. இரண்டு: வீடு வாங்க அல்லது ஃப்ளாட் வாங்க, கடன்



"இந்த ஊரிலே கொசுத் தொல்லை அதிகம். ஏமாந்தால் ஆளையே தூக்கின்டு போயிடும்."

"ஆனால் உங்கவீட்டிலே அந்த பயம் இல்லை. கட்டிலில் இருக்கிற மூட்டைப் பூச்சிகள், கொசுக்களைத் தூக்கிக் கொண்டு போகவிடாமல் கடிச்சுக் கீழே இழுத்துடறது."

— குறும்பன்.

## அத்தியாயம் 36

# பாண்டிமா தேவி!

வந்தியத்தேவனை வாலில்லாக் குரங்கோடு சேர்த்துக் கட்டியவர்கள், அவனுக்கு அருகில் சுவரில் மாட்டியிருந்த கலைமானின் கொம்புகளோடு மணிமேகலையைச் சேர்த்துக் கட்டினார்கள்.

"மந்திரவாதி! நான்தான் உங்கள் எதிரி! கடம்பூர் இளவரசியை ஏன் கட்டுகிறீர்கள்? விட்டு விடுங்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

ரவிதாஸன் அவனைப் பார்த்து, "பொறு, தம்பி, பொறு! பல தடவை நீ எங்கள் காரியத்தில் குறுக்கிட்டிருக்கிறாய்! ஒவ்வொரு தடவையும் உன்னை நாங்கள் உயிரோடு விட்டு வந்தோம். ஆனாலும் நீ எங்களைப் பின் தொடர்ந்து வருவதை நிறுத்தவில்லை!" என்றான்.

வந்தியத் தேவன் சிரித்தான்.

"என்னப்பா, சிரிக்கிறாய்? வாலில்லாக் குரங்கின் ஆலிங்கனம் அவ்வளவு குதூகலமாயிருக்கிறதா!" என்று கேட்டான் ரவிதாஸன்.

"இல்லை! நீ சொன்னதை எண்ணிப் பார்த்துத்தான் சிரித்தேன்!" என்றான் வல்லவரையன்.

"நான் சொன்னவற்றில் எதைக் குறித்து இப்படிச் சிரிக்கிறாய்?"

"உங்களை நான் தொடர்ந்து வருவதாகச் சொன்னாயே? நீங்கள் என்னை விடாமல் தொடர்ந்து வருவதாகவும் சொல்லலாம் அல்லவா? என் காரியத்தில் நீங்கள் குறுக்கிடுவதாகவும் சொல்லலாம் அல்லவா? இப்போது பார்! நான் கடம்பூர் இராஜகுமாரியை அழைத்துக் கொண்டு ஒரு முக்கியமான காரிய நிமித்தமாகப் புறப்பட்டேன். நீ குறுக்கிட்டு என்னை இந்தக் குரங்கோடு சேர்த்துக் கட்டிப் போட்டிருக்கிறாய்!"

"ஓகோ! அப்படியா சமாசாரம்? உன் காரியத்தில் நாங்கள் குறுக்கிடுவதாகவே வைத்துக் கொள். ஆனால் அவ்விதம் நேர்வது இதுதான் கடைசி முறை. இன்று நீ உயிரோடு பிழைத்து விட்டாயானால், பிறகு எங்களைக் காணவே மாட்டாய்!"

"அப்படியானால், நான் உயிரோடிருக்கப் பிரயத்தனப்பட வேண்டியது தான்! மந்திரவாதி! நான் உயிரோடு தப்புவதற்கு நீயே ஒரு தந்திரம் சொல்லிக் கொடு!" என்றான் வந்தியத்தேவன்.

"பேஷாகச் சொல்லித் தருகிறேன். இந்த மண்டபத்திலும் இதற்கு அடுத்த அறையிலும் என்ன நடந்தாலும் நீ அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இரு! பதற்றமாக ஒன்றும் செய்யாதே! உன் உயிருக்கு ஆபத்து நேராது."

"ஏன் என் பேரில் உங்களுக்கு அவ்வளவு அபிமானம்? ஏன் என்னைக் கொல்லாமல் விடுகிறீர்கள்?"

"அப்படிக் கேள்! அது பெரிய முட்டாள்தனந்தான்! ஆனால் எங்கள் தேவியின் கட்டளை!"

"யார் உங்கள் தேவி?"

"இன்னுமா உனக்குத் தெரியவில்லை? பாண்டி மாதேவிதான்! பெரிய பழுவேட்டரையரின் வீட்டில் வந்திருக்கும் வீரபாண்டிய சக்கரவர்த்தியின் வீரபத்தினி நந்தினி தேவிதான்!"

"நல்ல வீரபத்தினி!...."

"சீ! துஷ்டச் சிறுவனே! எங்கள் தேவியைப் பற்றி ஏதேனும் சொன்னால் உயிரை இழப்பாய்! ஜாக்கிரதை!"

"நீங்கள் அல்லவா பழுவூர் ராணியின் மீது அவதூறு சொல்கிறீர்கள்? இன்னொரு புருஷன் வீட்டில் வந்திருப்பவளை வீரபாண்டியனுடைய தேவி என்று சொல்கிறீர்களே?"

"அதனால் என்ன? இராமனுடைய பத்தினி சீதை, இராவணனுடைய வீட்டில் சிலகாலம் இருக்கவில்லையா?"

"இராமர் போய்ச் சீதா தேவியை அழைத்துக் கொண்டு வந்துவிட்டாரே?"

"நாங்களும் எங்கள் பாண்டிமாதேவியை அழைத்துக் கொண்டு போகத்தான் வந்திருக்கிறோம். அவர் பழுவூர் அரண்மனையில் தாமாகவே எந்தக் காரியத்துக்காகச் சிறைப்பட்டிருந்தாரோ, அது இன்றைக்கு முடியப் போகிறது....."

"ஆகா! அது என்ன காரியம்?"

"சற்று நேரம் பொறுமையாயிரு! நீயே தெரிந்து கொள்வாய்! உன் துஷ்டத்தனத்தைக் காட்டினாயானால், நீ மட்டுமல்ல, — இந்தப் பெண்ணும் துர்க்கதிக்கு உள்ளாக நேரிட்டு விடும்!"



இவ்விதம் கூறிவிட்டு ரவிதாஸன் எதிர்ப் பக்கத்துச் சுவரண்டை போவதற்கு யத்தனித்தான்.

"மந்திரவாதி! இன்னும் ஒரே ஒரு விஷயம் சொல்லிவிட்டுப் போ!" என்றான் வந்தியத் தேவன்.



## அருள்வாக்கு

வயிற்று உபவாஸம் மாதிரியே மௌனத்துக்கும் தர்ம சாஸ்திரத்தில் அநேக காலங்களை விதித்திருக்கிறது. 'மௌநேந போக்தவ்யம்' என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். சாப்பிடுகிற காலங்களில் பேசப்படாது என்று அர்த்தம். வாய்க்குள்ள இரண்டு வேலைகளில் ஒன்றாகச் சாப்பிடும் போது இன்னொரு வேலையும் தரப்படாது. இப்படி விதித்த போதே ருசியையும் கட்டுப்படுத்தியதாக ஆகிறது. 'இது வேண்டும், அது வேண்டாம்; இதற்கு உப்புப் போடு, அதற்கு நெய் விடு' என்றெல்லாம் சொல்ல முடியாதல்லவா?

ஸோமவாரம், குருவாரம், ஏகாதசி முதலிய நாட்களில் ஒன்றில் மௌனம் அனுஷ்டிக்கலாம்.

ஸோமவாரம், குருவாரம் ஆபீஸ் இருப்பதால் ஞாயிற்றுக்கிழமைகளில் மௌனமிருக்கலாம். பாதி நாளாவது இருக்கலாம்.

எத்தனையோ கார்யங்களை வைத்துக் கொண்டிருந்தார் காந்தி. ஒரு விட்டிலே அப்பா என்றாலே எவ்வளவோ கார்யம் இருக்கும். அவரை தேசபிதா Father of the Nation என்கிறார்கள். அப்படியிருந்தும் வாரத்தில் ஒருநாள் மௌனம் வைத்துக் கொண்டிருந்தார். 'மௌனமாயிருக்கக் கட்டுப்படி ஆகாது' என்று எவரும் சொல்ல முடியாதபடி அவர் ஓர் எக்ஸாம்பிள்.

மௌனமும் பட்டினியும் சேர்ந்தால், அதாவது வாய்க்கு இரண்டு காரியமுமே இல்லாமலிருந்தால் அன்று மனஸ் பாரமார்த்திகத்திலே நன்றாக ஈடுபடுவதை அனுபவத்தில் தெரிந்து கொள்ளலாம். அதனால் அவரவர் இஷ்ட தெய்வத்துக்காகச் சிவராத்திரியோ, ஷஷ்டியோ, ஏகாதசியோ பட்டினி கிடக்கிற போது மௌனமாகவும் இருக்கலாம். அம்பாளை உபாஸிக்கிறவர்கள் நவராத்திரி பூராவும் மௌனமாயிருப்பார்கள்.

நாம் பலவிதமான பேச்சுக்களைப் பேசி, கெட்ட விஷயங்களை விஸ்தாரம் பண்ணி, பல பேரைத் திட்டியும் வாக்தேவியான ஸரஸ்வதிக்கு அபசாரம் பண்ணுகிறோம். இதற்குப் பிராயச்சித்தமாக ஸரஸ்வதியின் நக்ஷத்திரமான மூலத்தில் மௌனம் இருப்பதுண்டு.

தினமுமே அரை மணியாவது மௌனமாகத் தியானம் பண்ண வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

ரவிதாஸன் திரும்பிப் பார்த்து, "தம்பி! என்னை 'மந்திரவாதி' என்று இனி அழையாதே!....." என்றான்.

"பின்னே, தங்களை என்னவென்று அழைக்க வேண்டும்?"

"முதன் மந்திரி என்று மரியாதையுடன் அழைக்க வேண்டும்!"

"ஐயா! தாங்கள் எந்த மகா ராஜ்யத்தின் முதன் மந்திரியோ?"

"தெரியவில்லையா, உனக்கு? பாண்டிய மகாசாம்ராஜ்யத்தின் முதன் மந்திரி! பள்ளிப்படைக்கு அருகில் நடந்த பட்டாபிஷேக வைபவத்தை நீ பார்த்துக் கொண்டிருந்தாயே?"

"பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் அது ஏதோ என் மனப் பிரமை என்று நினைத்தேன்........"

"அதனாலேதான் அதைப் பற்றி யாரிடமும் நீ சொல்லவில்லையாக்கும்!"

"இரண்டொருவரிடம் சொன்னேன். அவர்கள் என்னைப் பைத்தியக்காரன் என்றார்கள்; நான் ஏதோ துர் சொப்பனம் கண்டிருக்க வேண்டும் என்றும் சொன்னார்கள்......."

"ஆகா! அவர்கள் அப்படியே நினைத்துக் கொண்டிருக்கட்டும். நீ வெளியில் சொன்னால் யாரும் நம்ப மாட்டார்கள் என்று நம்பித்தான் உன்னை நாங்களும் உயிரோடு விட்டோம்!......"

"மந்திரவாதி! நீங்கள் என்னை உயிரோடு விட்டதற்கு அது ஒன்று மட்டும்தான் காரணமா?"

"வேறு என்ன?"

"உங்கள் ராணி எனக்காகச் சிபாரிசு செய்ய வில்லையா?"

"அதனால் என்ன?"

"இப்போதும் அவருடைய சிபாரிசு எனக்குக் கிடைக்கும்."

"கிடைக்கும் வரையில் பொறுத்திரு!"

"மந்திரவாதி! உங்கள் ராணி என்னை அவசரமாக அழைத்து வரும்படி இந்தக் கடம்பூர் இளவரசியை அனுப்பி வைத்தார். அதனாலேதான் நாங்கள் இருவரும் ஒன்றாக வந்தோம்......"

"அப்பனே! இராணியின் அறைக்கு வருவதற்கு வேறு வழி இருக்கிறதே? இந்த வழியில் வருவானேன்?"

"அதைப் பற்றி உன்னிடம் நான் சொல்ல வேண்டியதில்லை. ராணி கேட்டால் சொல்லிக் கொள்கிறேன்....."

"ராணி வந்து கேட்கும் வரையில் பொறுத்துக் கொண்டிரு!"

"மந்திரவாதி! என்னையும் சம்புவரையர் குமாரியையும் உடனே கட்டவிழ்த்து விடச் சொல்! இல்லாவிட்டால்.....?"

"என்ன செய்வாய்?"

"இந்த மண்டபம் அதிரும்படி கூச்சல் போடுவேன்!"

"நீ அப்படிக் கூச்சல் போட்ட உடனே உன் மேல் மூன்று வேல்கள் ஒரே சமயத்தில் பாயும். ஜாக்கிரதை!"

வந்தியத் தேவன் ஒரு முறை சுற்று முற்றும் கூர்ந்து பார்த்தான்.

ஆம்; மூன்று சதிகாரர்கள் கையில் வேலுடன் தயாராகக் காத்திருந்தார்கள்.

"தம்பி! நீ ரொம்பக் கெட்டிக்காரப் பிள்ளை. உன்னை எங்களுடன் சேர்த்துக் கொள்ளலாம் என்ற ஆசைகூட எனக்கு ஒரு சமயம் இருந்தது. ஆனால் அந்தப் பழையாறை மோகினியின் பாசவலையில் நீ விழுந்து விட்டாய். அது போனால் போகட்டும். இப்போது புத்திசாலித்தனமாகப் பிழை! சத்தம் மட்டும் போட்டால் நீ சாவது நிச்சயம்!"

இவ்வாறு ரவிதாஸன் எச்சரித்து விட்டு எதிர்ப் பக்கத்துச் சுவரில் பொருந்தியிருந்த யானை முகத்தை நோக்கிப் போனான். சிறிது நேரம் சுவரண்டை காது கொடுத்துக் கேட்டான். பின்னர், அந்த யானையின் நீண்ட தந்தங்களைப் பிடித்துத் திருகினான்.

அங்கே ஒரு சிறிய துவாரம் ஏற்பட்டது. உள் அறையில் பிரகாசமாக ஜொலித்துக் கொண்டிருந்த தீபங்களின் ஒளி வட்ட வடிவமான பூரண சந்திரனுடைய வெள்ளிக் கிரணங்களைப் போல் வேட்டை மண்டபத்துக்குள்ளும் வந்து சிறிது பிரகாசப் படுத்தியது.

வந்தியத் தேவன் பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தான். இளவரசி மணிமேகலைதன் இடுப்பில் செருகியிருந்த சிறு கத்தியை எடுத்து அவனைக் கட்டியிருந்த கட்டுகளை அறுத்து விட்டதைத் தெரிந்து கொண்டான்.

மணிமேகலை இடும்பன்காரியிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்த சிறிய விளக்கு, வேட்டை மண்டபத்தின் ஒரு மூலையில் 'முணுக்கு' 'முணுக்கு' என்று எரிந்து கொண்டிருந்தது. அதன் வெளிச்சம் மணிமேகலையின் மீது படவே இல்லை. மேலும் சதிகாரர்கள் வந்தியத் தேவனையே கவனித்துக் கொண்டிருந்தபடியால், கடம்பூர் இளவரசி மணிமேகலையைக் கவனிக்கவும் இல்லை.

மணிமேகலை கட்டை அவிழ்த்து விடுதலை அடைந்து விட்டதை வந்தியத் தேவன் கவனித்துக் கொண்டான்.

உடனே வாயைக் குவித்துக்கொண்டு ஆந்தை கத்துவது போல் கத்தினான்.

முதலில் சதிகாரர்கள் மூவரும் சிறிது பிரமித்து நின்றார்கள். திறந்த துவாரத்தின் வழியாக உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த ரவிதாஸனும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"ஆகா! உன் வேலையா?" என்று சொல்லிக்கொண்டு வந்தியத் தேவனை நோக்கி விரைந்து வந்தான்.

அவன் யானைத் தந்தங்களிலிருந்து கையை எடுத்ததும், சுவரிலிருந்து துவாரம் மறைந்தது. மறுபடியும் வேட்டை மண்டபத்தில் இருள் சூழ்ந்தது.

சதிகாரர்கள் மூவரும் கையில் வேல்களுடன் வந்தியத் தேவனை நோக்கி விரைந்து ஓடி வந்தார்கள்.

அவர்களில் ஒருவனை முறுக்கிய நீண்ட கொம்புகளை உடைய மான் தாக்கியது. இன்னொருவன் மீது பிரம்மாண்டமான கரடி ஒன்று விழுந்து அவனைக் கீழே தள்ளியது. மற்றொருவன் மீது திறந்த வாயையும் பயங்கரமான பற்களையும் உடைய முதலை பாய்ந்தது. ரவிதாஸன் தலை மீது ஒரு பெரிய ராட்சத வௌவால் தடாலென்று விழுந்தது.



வ்விதம் திடீரென்று ஏற்பட்ட தாக்குதல்களினால் அவர்கள் ஒரு நிமிடம் செயலற்று நின்றபோது, மணிமேகலை வந்தியத் தேவனை அணுகி அவனுடைய கட்டுக்களை அறுத்து விட்டாள்.

வந்தியத்தேவன் இதுகாறும் தன்னைப் பிடித்துக் கொண்டிருந்த வாலில்லாக் குரங்கைத் தூக்கி அந்தச் சதிகாரர்கள் மேல் வீசி எறிந்தான்.

நால்வரும் தங்கள் மீது விழுந்த செத்த விலங்குகளின் உடல்களைத் தள்ளிவிட்டு மெதுவாகச் சாமாளித்து எழுந்தார்கள். இதற்குள் வந்தியத் தேவன் கையில் வேல் ஒன்றை எடுத்துக் கொண்டிருந்தான். தாக்க வருகிறவர்களைத் திருப்பித் தாக்குவதற்குத் தயாராயிருந்தான்.

அச்சமயம் நந்தினி தேவியின் படுக்கை அறைக் கதவு நன்றாகத் திறந்தது.

வேட்டை மண்டபத்துக்குள் வெளிச்சம் புகுந்து பிரகாசப் படுத்தியது.

மறு கணம் நந்தினி தேவியும் வேட்டை மண்டபத்துக் குள்ளே பிரவேசித்தாள்.

"மந்திரவாதி! இது என்ன மூடத்தனம்? இங்கே என்ன தடபுடல் செய்கிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே மேலே வந்தாள்.

(தொடரும்)

# கோடு தாண்டிய பிள்ளை

**சா**ரதி இப்படி ஒரு காரியம் செய்வான் என்று பூமா கொஞ்சம் கூட நினைத்துப் பார்க்கவில்லை.

அவளைப் பிரிந்து போக வேண்டியிருக்கும் என்ற ஒரே காரணத்திற்காக, அபூர்வமாகக் கிடைக்கக்கூடிய வெளிநாட்டு வாய்ப்புக்களை உதறித் தள்ளிய சாரதி —

இப்படி ஒரு காரியம் செய்து விட்டு வந்திருந்தான்...

பூமாவின் நினைவு பல வருடங்களுக்கு முன் பாய்ந்தது.

**அ**வள் கணவன் வாசுவும், அவன் உயிர் நண்பன் தேசிகனும் சேர்ந்து ஆரம்பித்து வைத்தது அந்த ஜவுளிக் கடை. முதல் வாசுவினுடையது; உழைப்பு தேசிகனுடையது. இப்படித்தான் வியாபாரம் ஆரம்பித்தது. வாசு எலெக்ட்ரிஸிடி போர்டில் ஜூனியர் இன்ஜினீயர் வேலை பார்த்து வந்தான். அதனால் வியாபாரத்தில் நேரடியாக ஈடுபட முடியவில்லை. தேசிகனை நம்பி முழுப் பொறுப்பையும் ஒப்படைத்தான்.

ஊரிலிருந்த பத்து ஏக்கர் நன்செய், மாந்தோப்பு, தென்னந்தோப்பு எல்லாவற்றையும் விற்று இந்தக் கடையில் பணத்தைப் போட்டிருந்தான். தேசிகனும் அவனுமாகப் பம்பாய் சென்று, மொத்த வியாபாரிகளுடன் நேரடித் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு சரக்குகளை வரவழைத்தார்கள்.

அந்த வருஷத் தீபாவளியின் போது, நகரிலேயே பூமா சில்க் ஹவுஸ்தான் நல்ல வியாபாரம். கூட்டம் 'ஜேஜே' என்று அலை மோதியது.

ஆனால், அடுத்த வருஷத் தீபாவளிக்குள், கடையே ஏலத்திற்குப் போகும் நிலை வந்து விட்டது. தேசிகனுக்கும் தெரியாமல் ஏதோ நடந்திருக்கிறது என வாசு நினைத்தான். கடையைத் தொடர்ந்து நடத்த தேசிகன் என்னென்னவோ செய்து பார்த்தான். கடையில் சரக்குகள் தேங்கிக் கிடந்தன. கொள்முதல் செய்த இடங்களுக்கும் பணம் போகவில்லை. கடன்காரர்கள் நெருக்கினார்கள்.

புது வெள்ளம் வந்து பழைய தண்ணீரையும் சேர்த்து அடித்துக் கொண்டு போனது போல், பூமாவின் ஐம்பது பவுன் நகைகள், சொந்த வீடு அத்தனையும் ஈடுகாட்டியும் கூடக் கடன்காரர்களிடமிருந்து தப்ப முடியவில்லை.

சிங்கப்பூரிலிருந்து திரும்பிய முஸ்லிம் பிரமுகர் ஒருவர் அடிமாட்டு விலைக்குக் கடையை வாங்கினதால், வாசுவின் குடும்பம் நடுத் தெருவிற்கு வராமல் தப்பியது.

''நான் எத்தனையோ ஜாக்கிரதையாகத்தானே இருந்தேன். எப்படியோ இப்படி ஆகிவிட்டதே'' எனப் புலம்பினான் தேசிகன். மேலுக்குப் பேசத்தான் முடிந்ததே தவிர நஷ்டத்தைத் தாங்கிக் கொள்ள அவனிடம் வசதி இல்லையே!

எப்படியோ இந்த மட்டுமாவது தப்பித்தோம் என்ற வாசுவிற்கு அடுத்த அடி... அரசாங்க வேலையில் இருந்தபடி ஜவுளிக் கடை வைத்துச் சம்பாதித்தான் என்று அரசாங்கத்திற்கு மொட்டைக் கடுதாசி போயிற்று.

விசாரணை நடந்தது. அவனைச் சிக்க வைக்க ஆதாரங்கள், தடயங்கள் அசைக்க முடியாமல் கிடைத்திருந்தன. வாசுவிற்கு வேலை போயிற்று.

வேலை நீக்க உத்தரவு வந்த மறுநாள், வாசு படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. அந்த அதிர்ச்சியிலேயே நிரந்தரமாக உறங்கி விட்டான்.

**அ**ன்று தேசிகன் அழுத அழுகையைப் பார்த்து ஊரே கலங்கியது. ''நண்பர்கள் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்!'' என அதிசயப்பட்டார்கள்.

''பாவி... நான் கடை வைக்கச் சொன்னதுதானே எல்லாவற்றிற்கும் காரணம். இந்தப் பாழாப் போன வியாபாரம் ஆரம்பிக்காமல் இருந்தால் இப்படி அநியாயமாகப் போயிருக்க மாட்டானே! எனக்குச் சாவு வர மாட்டேன் என்கிறதே!'' — எனப் புலம்பித் தீர்த்தான்.

பூமாவிற்குக் கூட மனத்தை என்னவோ செய்தது. ''வியாபாரம் என்றால் லாபம் சம்பாதிப்பதும் உண்டு. நொடித்துப் போவதும் உண்டு. நம் விதி நஷ்டப்பட்டோம். தேசிகனை நொந்து கொண்டு என்ன பயன்? பாவம்... ஒரு நாளைக்கு இருபது மணி நேரத்திற்கு மேலே கடைக்காக உழைத்திருக்கிறான்!'' எனத் தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டான்.

ஆனால் —

ஆறு மாதத்திற்குள் —

திருச்சியில் ''வாணி சில்க்ஸ்'' என்று ஒரு

ஜனனி

கடை தொடங்கப்பட்டதும், அதன் ஏக போக முதலாளி தேசிகன்தான் எனத் தெரிய வந்தபோதும் —

பூமா புரிந்து கொண்டாள். தேசிகன் ரொம்பப் புத்திசாலி. எத்தனையோ வரவு களைக் கணக்கில் காட்டவில்லை. கண்ணுக் குத் தெரியாமல் கறையான் அரிப்பது போல் ஒரு பக்கம் கடையைக் காலியாக்கி விட்டு, மறுபக்கம் தனக்கென்று ஒரு கூடு கட்டிக் கொண்டதைத் தெரிந்து கொண்டாள். தேசிகனைத் திட்டித் தீர்ப்பதைத் தவிர அவளால் வேறு என்ன செய்ய முடியும்?

எங்கே போய் முறையிடுவது? யார் நம்பு வார்கள்? நம்பினால் மட்டும் என்ன பிரயோ ஜனம்? வழக்கு நடத்தினால் ஜெயிக்க முடி யுமா? அப்படியே வழக்கை நடத்த யார் துணை செய்வார்கள்?

**த**ன் மொத்த கவனத் தையும் பிள்ளை சாரதி யின்பால் செலுத்தினாள். தெரிந்தவர்கள் சிபாரி சில் நர்ஸ் பயிற்சிக்குச் சேர்ந்தாள். பயிற்சி முடிந் ததும் ஒரு தனியார் ஆஸ் பத்திரியில் வேலைக்குச் சேர்ந்தாள்.

அவள் உலகம் சாரதி தான். அவனைப் படிக்க வைத்தாள். நகரிலேயே பிரபலமான பள்ளியில் செலவைப் பொருட் படுத்தாமல் சேர்த்தாள். ஆஸ்பத்திரியில் எட்டு மணி நேரம் வேலை பார்த்த பிறகு, மற்ற நேரத்தில் தையல் மெஷி னில் தேய்ந்தாள். தையல் வகுப்புகள் நடத்தினாள். ஹிந்தி கற்றுக் கொடுத் தாள்.

காலையும் மாலையும் ஆண்டவனிடம் இரண்டு பிரார்த்தனைகள் செய் தாள்.

முதலாவது — ஆண் டவனே... சாரதிக்கு நல்ல வாழ்க்கை அமைத்துக் கொடு.

இரண்டாவது... தேசிகன், அவன் செய்த மோசடிக்கும், நம்பிக்கைத் துரோகத்திற்கும் பிச்சை எடுக்கும் நிலைக்கு ஆளாகவேண்டும். அவள் முன் அவன் மண்டியிட்டு மன்னிப்புக் கேட்க வேண்டும். அவள் மூச்சு நிற்கும் முன் இது நடந்தாக வேண்டும். நிறை வேற்றிக் காட்டுவாயா, ஆண்டவனே...!

**சா**ரதி படித்தான். நன்றாகப் படித்தான். எல்லாவற்றிலும் முதல். ஐ.ஐ.டி.யில் இடம் கிடைத்தது. பி.டெக்., எம்.டெக்., எம்.பி.ஏ. என்று பட்டங்கள் அவன் பின் சேர்ந்தன.

அயல்நாட்டுத் தொடர்புடைய பெரிய நிறுவனத்தில் எடுத்த எடுப்பிலேயே மாதம் நாலாயிரம் ரூபாய் சம்பளத்தில் வேலை யில் சேர்ந்தான். அவன் உழைப்பின் தரத் தையும், திறமையையும் மெச்சிய அந்தக் கம்பெனி நாலே வருஷங்களில் அவனை மிகப் பெரிய பொறுப்பில் அமர்த்தியது.

கம்பெனியில் கொடுத்த பங்களா, சொந்தத்தில் கார். பூமா கேட்காமலேயே தங்கமும், வைரமும் வாங்கிக் குவித்தான். இடுப்பில் சாவிக் கொத்து குலுங்க மகா








## பாரத மாதாவே!

பாதுகைகூடச் சிம்மாசனம்
ஏறியது முன்பு.
இப்பொழுது
சிம்மாசனம் கூடச்
செருப்படி படுகிறது!

வெள்ளைக்காரர்கள் எங்கள்
பொருளாதாரத்தைச் சுரண்டினார்கள்;
நாங்கள்
இப்போது
சுரண்டலையே
பொருளாதாரமாக்கி விட்டோம்.

பாரத மாதாவே,
இங்கே ஆயிரம் கட்சிகள்;
அவற்றின் ஒரே கொள்கை
மக்களை ஏமாற்றுவதே!

அரசியலுக்காக வோட்டு
என்ற நிலைமை போய்,
வோட்டுக்காக அரசியல்
இங்கே உருவாகிறது
லஞ்ச ஒழிப்புத் துறையில்
வேலை கிடைக்க
லஞ்சம் கொடுக்க வேண்டியிருக்
கிறது...

பாரத மாதாவே,
கங்கையில் முழுகினால் கூட
எங்கள்
உடம்பிலுள்ள அழுக்குத்தான்
கரையுமே தவிர,
மனத்திலுள்ள மாசுகள்
கரையாது...

— பா. அமிழ்தன்.

ராணி போல பூமா வளைய வந்தாள்.

அப்படித் தாயின் மேல் பரிவையும், பாசத்தையும் பொழிந்த பிள்ளைதான் இப்படி ஒரு காரியத்தைச் செய்துவிட்டு வந்திருக்கிறான்.

ஆமாம்... சாரதி கல்யாணம் செய்து கொண்டு விட்டான்.

பூமாவிடம் சாரதி இது பற்றி ஏதும் சொல்லவில்லை. கோவிலுக்கு அவர்களை அழைத்துச் சென்று, கல்யாணத்தை நேரில் பார்த்த கார் டிரைவர் சொல்லித்தான் தெரியும். சாரதிதான் சொல்லச் சொன்னானாம்.

பூமா பெரிதும் அதிர்ந்துதான் போனாள். விழுங்க முடியாத செய்திதான். ஆனால் இதை விடப் பெரிய அதிர்ச்சிகளை அவள் சந்தித்து இருந்தாளே. கொஞ்ச நேரத்தில் அவள் மனம் சமாதானம் அடைந்தது.

அவள் யோசித்துப் பார்த்தாள். பாவம், சாரதி. தனக்கு என்று ஏதாவது வேண்டும் என அவன் கேட்டதேயில்லை. அவளாகப் பார்த்துச் செய்தால்தான் உண்டு. முதல் முறையாக அவனாகச் செய்த முதல் காரியம் இதுதான். அவளிடம் அவன் ஒரு வார்த்தை கேட்டிருக்கலாம். அவன் சந்தோஷம் தான் அவள் லட்சியம். கேட்டிருந்தால் மறுத்திருக்கப் போவதில்லை.

உம். என்ன இருந்தாலும் வீட்டிற்கு மருமகள் வரப் போகிறாள். விளக்கேற்ற வருபவள். புன்முறுவலுடன் ஆரத்தி எடுத்து வரவேற்க வேண்டியது அவள் கடமை.

பக்கத்து வீட்டிலிருந்த இரண்டு சுமங்கலிகளுக்குச் சொல்லி அனுப்பினாள். இரவு விருந்திற்கு ஏற்பாடு செய்தாள். சாரதியின் அறையை அலங்கரிக்க பூக்கடைக்காரனுக்கு ஆள் அனுப்பினாள்.

அந்தப் பெண் எப்படி இருப்பாள்? தன் மருமகளைப் பார்க்கப் பெரிதும் ஆசைப்பட்டாள்.

வாசலில் கார் வந்து நிற்கும் ஒலி கேட்டது. பூமா வேகமாக ஓடினாள்.

ஆனால், காரிலிருந்து இறங்கியது சாரதி மட்டும்தான்.

வந்தவன் பூமாவிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் விடுவிடுவென்று மாடி ஏறிப் போனவன் தன் அறையினுள் நுழைந்து கதவை மூடிக் கொண்டான்.

ஆரத்தித் தட்டுடன் காத்திருந்தவர்கள் ஒன்றும் புரியாமல் விழித்தார்கள்.

என்ன ஆயிற்று இவனுக்கு? ஏன் 'உம்' என்று இருக்கிறான்...? அந்தப் பெண் ஏன் இவனுடன் வரவில்லை? — பூமா குழம்பிப் போனாள்.

அவள் அவனைக் கோபித்துக் கொள்வாள் என்ற பயமா? உதாசீனப்படுத்தினால் என்ன செய்வது என்ற தயக்கமா?

தானாகவே மாடி ஏறிப் போய் மூடியிருந்த கதவைத் தட்டினாள். நிதானமாக எழுந்து வந்து கதவைத் திறந்தான் சாரதி.

# மங்களம்

1-11-89 இதழிலிருந்து

ராஜேஷ்குமார் எழுதும் புதிய தொடர்

## ஊதா நிழல்

ஜெயரதன் எழுதும்

## பொன் மாலைப் பொழுது

நான்கு வாரத் தொடர்

வீரபாண்டியன் - கோர்ட் ரூம்

மற்றும் சுவையான பகுதிகள்

விக்கிரமன்
புஷ்பா தங்கதுரை
சகுந்த்
சிறுகதைகள்

நடிகை
ரேகாவுடன்
போனில்
பேசியவர்கள்....
சிறப்புக் கட்டுரை

விலை ரூ 1·60

இந்தியாவிலேயே அதிகம் விற்பனையாகும்
பத்திரிகைக் குடும்பத்திலிருந்து
வெளிவரும் குடும்பவார இதழ்.

1-11-89 இதழ்
25.10.89 புதன்
அன்று கிடைக்கும்.

விநியோக அலுவலகம் த.பெ. எண் 2466, கோயம்புத்தூர்- 641 009.

நிர்வாக ஆசிரியர்: எம்.சி.வர்கீஸ்

★சிறப்பு ஆசிரியர்: விக்கிரமன்

விற்பனையாளர்கள் இல்லாத இடங்களுக்கு விற்பனையாளர்கள் தேவை.

''அவள் எங்கேடா?'' எனக் கேட்டாள் பூமா.

அவன் பதில் சொல்லவில்லை.

''உனக்குக் கல்யாணம் ஆயிற்று என்று டிரைவர் மூலம் சொல்லி அனுப்பித்தாயே.. ரொம்ப சந்தோஷம்.''

''உம்... தாலி கட்டுவதுதான் கல்யாணம் என்றால்... எனக்குக் கல்யாணம் ஆகி விட்டது.''

''ஏண்டா என்னமோ போல் பேசு கிறாய்...? கோவிலிலிருந்து மாலையும் கழுத்துமாக இரண்டு பேரும் நேராக இங்கு வர வேண்டியதுதானே?''

''உம்.. வருவாள். கட்டாயம் வருவாள்.. வராமல் எங்கே போய் விடுவாள்?'' என்றான் சாரதி.

''ஏண்டா. உனக்கு என்னடா ஆயிற்று? முகத்தில் சந்தோஷத்தையே காணோம்...? ஏம்பா! கல்யாணம் ஆன உடனேயே இரண்டு பேருக்குள்ளே மனஸ்தாபமா?'' எனக் கேட்டாள் பூமா.

சாரதி பெரிதாகச் சிரித்தான். பூமாவின் கையைப் பிடித்து வராந்தாவில் இருந்த சோபாவில் உட்கார வைத்தான்.

''இப்போது நான் எல்லாவற்றையும் சொல்கிறேன். நான் கல்யாணம் செய்து கொண்ட அந்த வனஜா நம்முடைய குடும்பத்தைக் குட்டிச்சுவராக்கிய அந்த தேசிகனின் பேத்தி. ஒரே வாரிசு...''

பூமா அதிர்ந்து போனாள் — உண்மையாகவே.

''ஆ ண் ட வ னே! இது என்ன சோதனை?'' — வாய் விட்டு அலறி விட்டாள் பூமா.

''பயப்படாதே அம்மா. அந்தத் தேசிகன் நமக்குச் செய்த அக்கிரமத்தை நான் கொஞ்சமும் மறக்கவில்லை. கல்யாணமான பிறகு நடந்ததையெல்லாம் அந்தப் பெண்ணிடம் நான் விவரமாகச் சொல்லி விட்டேன். அவள் இந்த வீட்டுப் படி தாண்டி உள்ளே வர வேண்டும் என்றால், எனக்கு மனைவியாகக் குடும்பம் நடத்த வேண்டும் என்றால், உனக்கு மருமகள் என்ற ஸ்தானத்தில் இந்த வீட்டில் வளைய வர வேண்டும் என்றால், அந்தத் தேசிகன் முதலில் இங்கே வர வேண்டும். தான் கொள்ளையடித்த அத்தனையையும் உன் காலடியில் சமர்ப்பிக்க வேண்டும். 'என் பேத்திக்கு வாழ்வு கொடு! என்று உன் காலைப் பிடித்துக் கெஞ்ச வேண்டும். மற்றவற்றைப் பற்றி அப்புறம் யோசிக்கலாம்!' எனக் கூறி இருக்கிறேன்...'' என்றான்.

பூமா வாயடைத்துப் போய் நின்றாள்.

''என்னம்மா... சிலை போல் நின்று விட்டாய்? அந்த மனிதனுக்கு ரோஷம் இருக்கும். தன்மானம் இருக்கும். உடனே வர மாட்டான். ஒரு மாதம், ஆறு மாதம், ஒரு வருஷம். எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் ஆகட்டும். உன் காலில் அவன் மட்டும் விழா விட்டால்...''

''வாயை மூடுடா!'' எனக் கர்ஜித்தபடி எழுந்து நின்றாள் பூமா.

''அம்மா!''

''இப்போதுதாண்டா எனக்கு உன் மேல் கோபம் வருகிறது. நீ படித்தவன்தானா? எந்த யுகத்தில் நீ இருக்கிறாய்? பழிக்குப் பழி, ரத்தத்திற்கு ரத்தம் என வம்பு பேசிக் கொண்டு... அவள் தேசிகன் பேத்தியாகத் தான் இருக்கட்டுமேடா! என்னடா பாவம் செய்தாள்? உன் முன்னால் தலையைக் குனிந்து, தன் குடும்பத்தாருக்குக் கூடச் சொல்லாமல், தாலியை வாங்கிக் கொண்ட போது என்ன நினைத்திருப்பாள்? உலகத்தில் உன்னைத் தவிர தனக்கு யாரும் தேவையில்லை என்றுதானே? நெஞ்சில் எத்தனை எதிர்பார்ப்புகள் இருந்திருக்கும்... கல்யாணம் என்பது வெறும் சடங்கு மட்டும் இல்லையப்பா. என்றைக்கு நீ அவளை உன் மனைவி என்று ஆண்டவன் சாட்சியாக ஏற்றுக் கொண்டாயோ, அந்த நொடி முதல் அவள் தேசிகன் பேத்தி இல்லை. என் மருமகள். இந்த வீட்டில் விளக்கேற்ற வந்த தேவதை. இப்போது நீயாகப் போய் அவளைக் கூட்டி வரப் போகிறாயா...? பிடிவாதக்காரன். போக மாட்டாய். நான் போகிறேன்... டிரைவர்...'' என அழைத்தபடி கீழே இறங்கினாள் பூமா.

அங்கே வாயிற்படியில் கூப்பிய கரங்களுடன் தலையைத் தாழ்த்தியபடி நின்றிருந்தார் தேசிகன் அத்தனை வார்த்தைகளையும் காதில் வாங்கியபடி.

அவருக்குப் பின்னே, மருண்ட பார்வையுடனும், திகிலுடன் காத்திருந்தாள் வனஜா. அந்த வீட்டு மகாலட்சுமி.

பூமாவிற்குக் கையும் ஓடவில்லை. காலும் ஓடவில்லை.

''யாரங்கே.. அவர்கள் வந்து விட்டார்கள். ஆரத்தி எடுத்து வாருங்கள்'' எனக் கூவினாள்.

கண்களில் நீர் திரையிடத் தன் தாயைப் பார்த்தபடி, வனஜாவின் பக்கம் போய் நின்றான் சாரதி.

பூமாவின் இரண்டாவது பிரார்த்தனையும் நிறைவேறி விட்டது. நல்லபடியாக!

**14 — ஆம் பக்க சஸ்பென்ஸ்:**

எஸ். வி. சேகர்



டெல்லிகணேஷ்



# ஏழாவது இரவு

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்: ...

①

இரவு பத்து மணிக்கு அந்தத் தந்தி வந்தது. பிரித்துப் படித்த ரஞ்சனா அதிர்ந்து போனாள்.

சென்னையில் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த அக்கா வசுமதி கடலில் நீந்தப் போனபோது விபத்துக்குள்ளாகி உயிரிழந்து விட்டாள் என்கிற சோகச் செய்தியைத் தாங்கி வந்திருந்தது தந்தி.

இந்த நேரத்துக்கு மேல் ரயிலும் கிடையாது. பஸ்ஸும் இல்லை. எப்படிப் புறப்படுவது என்பது புரியாமல் தவித்தாள்.

இன்னொரு பிரச்னையும் இருந்தது.

உடல் நலம் சரியில்லாமல் இருந்த அம்மா இந்தச் செய்தியைத் தாங்கிக் கொள்வாளா? குழம்பினாள். அப்போது —















அம்மாவைச் சமாதானப் படுத்தி, அவளுக்குத் துணை ஏற்பாடு செய்து, மறுநாள் காலையில் பஸ் பிடித்துப் புறப்படும் வரையில் அவளுக்கு இருந்த மன இறுக்கத்தைச் சொல்லி முடியாது.

வசுமதிக்கு என்ன நேர்ந்தது என்கிற உண்மையை அவள் உள் மனம் உணர்த்திருந்தது. சென்னை போய்ச் சேரும் வரையில் அதை நினைத்தும் பார்க்கக் கூடாது என்று எண்ணங்களைப் பிடிவாதமாகக் கட்டிப் போட்டாள்.

சென்னையை அடைந்து, ஆட்டோ பிடித்து அந்தப் போலீஸ் நிலையத்தை அடைந்து, தந்தி கொடுத்த இன்ஸ்பெக்டர் முரளியைச் சந்திக்கும் வரையில் கட்டுப்பாட்டுடன் இருந்த ரஞ்சனா, அவரைப் பார்த்ததும் உடைந்தாள்.













"இல்லை சார், மன்னிக்கணும்" என்று உறுதியான குரலில் ரஞ்சனா சொல்லிக் கொண்டிருந்த போதே அந்த இளைஞன் அங்கே வந்தான்.

அவனைப் பார்த்ததும் சட்டென்று பேச்சை நிறுத்தினாள். பார்வை அவன் மீது நிலைத்தது. மனம் விரைந்து செயல் பட்டது.

'இவன்.... இவன்.....

— தொடரும்

# விளம்பரப் பிரியராக இருக்கிறாரே



* விளம்பரப் பிரியர்!

* அ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

**? மராட்டிய முன்னாள் முதல்வர் அந்துலேயை இ. காங்கிரஸ் மீண்டும் சேர்த்துக் கொண்டது பற்றி?**

! பவார் சற்றுத் துள்ளினால் சமாளிக்க ஓர் ஆள் வேண்டாமா? ஒருவரை மட்டந் தட்ட இன்னொருவர் என்ற நடைமுறை தானே காங்கிரஸ் குட்டிச்சுவரானதற்கு முக்கிய காரணம்!

* எஸ். செல்வமணி, சென்னை — 30.

**? பத்திரிகைகளைத் தம் வாரிசுகளிடம் ஒப்படைக்கும் போது அரசியலுக்கு வாரிசு உருவாக்குவதில் என்ன குற்றம்?**

! பத்திரிகைகள் என்பன பிரைவேட் லிமிடெட் கம்பெனியாகவோ அல்லது பப்ளிக் லிமிடெட் கம்பெனியாகவோ நடக்கும் நிறுவனங்கள். அதில் பங்குகளை வைத்திருப்பவர் சட்டப்படி வாரிசுகளை உருவாக்கித் தமது பங்குகளை ஒப்படைக்கலாம். அந்த வாரிசுகளும் திறமையிருந்தால் தொடர்ந்து சரியாக நடத்துவார்கள். இல்லையெனில் பங்குதாரர்களான ஒரு சிலருக்கு மட்டுமே நஷ்டம். ஆனால் கட்சியும் ஆட்சியும் அப்படியல்ல. அவை பொதுச் சொத்துக்கள். அவற்றைப் பிரைவேட் லிமிடெட் கம்பெனி போல் நடத்தக் கூடாது. தலைமைப் பொறுப்பில் உள்ளவர், பொது மக்கள் சார்பில் தர்மகர்த்தா போலிருந்து யோக்கியமாக நடக்க வேண்டும். ஜனநாயக முறைப்படி வாரிசு உருவாக ஊக்கமளிக்கலாம்; ஆனால் வாரிசைத் தாமே உருவாக்கக் கூடாது. கட்சியின் சொத்தைத் தமது சொந்தச் சொத்து போல் கருதி, தமது மகனோ அல்லது மகளோ நிர்வகிக்க வேண்டும் என்று எண்ணக் கூடாது. தகுதியிருந்து, ஜனநாயக மரபுப்படி தேர்ந்தெடுக்கப்பட்டு மகனோ, மகளோ தலைவராவதில் தவறில்லை. ஆனால் தகுதியற்றவர் கைக்குப் போய்ச் சேர்ந்தால் நாடே அதனால் பாதிக்கப்படும். கட்சி என்பது தனி மனிதர் சொத்தாக இருக்குமானால் அண்ணாவுக்குப் பிறகு கருணாநிதி தி. மு. க. தலைவராகியிருக்க மாட்டார்! அண்ணாதுரையின் குடும்பத்தினர்தான் ஆண்டு கொண்டிருப்பார்கள்!

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.

**? வருங்காலத்தில் ராஜராஜன் விருதை வழங்க ஜெயலலிதா எழுதிய புத்தகத்தைத் தேடி வைத்துக் கொள்ள நடுவர்களுக்கு யோசனை கூறியிருக்கும் 'தராசு'வுக்கு, ஜெயலலிதா கண்டிப்பாக முதல்வராகி விடுவார் என்ற நம்பிக்கை ஏற்பட்டு விட்டதா?**

! நடுவர்கள் நடந்து கொண்ட விதத்தைக் கண்டிக்கும் நோக்கில் ஒரு பேச்சுக்குச் சொன்ன விஷயம் அது. எதிர்காலம் பற்றி ஜோசியம் சொல்கிறவனல்ல நான். என்றாலும் யதார்த்த நோக்கில் பார்த்தால் கூட இன்றைய நிலைமையில் மிக அதிகமான வோட்டுக்களைக் கவரக் கூடிய இருவரில் ஒருவராக அவர்தானே விளங்குகிறார்! அதிலும் பல்வேறு அணிகளும் ஒன்றாய் இணைந்த பிறகு — காங்கிரஸ் கூட்டணியும் ஏற்பட்ட பிறகு, அவர் கை ஓங்கித்தானே இருக்கிறது!

* அ. முஸ்தபா, தக்கோலம்.

**? எப்பவுமே தாய்க்குலத்தின் வோட்டுக்களை அதிகம் பெற முடியாத கலைஞர், கனிமொழியை அரசியலில் நுழைத்துத் தாய்க்குலத்தைக் கவர்ந்தால் என்ன?**

! நல்லவேளை, 'கனி'மொழியை சினிமாவில் நடிக்க வைத்து அதன்பின் அரசியலில் நுழைத்தால் இன்னும் அதிகம் பேரைக்



* துள்ளினால்...



* ...சமாளிக்க!



* வாழ்த்துக்கள்!



* நோபல் பரிசு!

கவரலாமே' என்று ஐடியா கொடுக்காமல் போனீரே! கல்யாணத்துக்குத் தேதி வேறு குறித்தாயிற்று. தம்பதிகள் அரசியல் ஆசைகளுக்கும் சினிமா மோகங்களுக்கும் அப்பாற்பட்டு சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் வாழ வாழ்த்துக்கள்!

* பி. செல்வகுமார், ஆழியார்.*

? விளம்பரப் பிரியராக இருக்கிறாரே, கருணாநிதி?

! ஆமாம், ஆமாம்! அதை நன்றாகப் புரிந்து கொண்டுதான் அவருடைய அமைச்சர்களும் அதிகாரிகளும் கட்சிக்காரர்களும் நடந்து கொண்டு, ஏகப்பட்ட விளம்பரத்தைத் தேடித் தருகிறார்கள்! ஜெயலலிதாவின் கடிதத்தை அபகரித்து, சேலையைப் பற்றி இழுத்ததில் தொடங்கி, சமீபத்தில் உண்ணும் விரதம் இருந்து, வழக்கறிஞர்

# கருணாநிதி?

கிருஷ்ணசாமியை அடித்து நொறுக்கியது வரை, வரிசையாக எத்தனை பப்ளிசிடி கலைஞர் ஆட்சிக்கு!

* ஏ. பி. வரதராஜ பெருமாள், திருத்தங்கல்.

? தவிலும் வயலினும் சேர்ந்த இசைக் கலவையை ரசித்ததுண்டா?

! கேட்டிருக்கிறேன். ஆனால் ரசிக்க முடியவில்லை! வயலினும் நாதஸ்வரமும் கூட இப்படித்தான், பொருந்தாச் சேர்க்கை! காங்கிரஸும் அ. தி. மு. க.வும் கூட்டணி அமைத்தது போல!

* புவனாப்பிரியன், சீர்காழி.

? டி. வி. யில் நீங்கள் விரும்பிப் பார்க்கும் நிகழ்ச்சி எது?

! நான் விரும்பிப் பார்க்க வேண்டிய நிகழ்ச்சி என்று The World this Week நிகழ்ச்சியை நண்பர்கள் குறிப்பிடுகிறார்கள். ஆனால் நான் Early to Bed Early to Rise நிகழ்ச்சியை விடாமல் பின்பற்றுபவனாதலால் நண்பர்களின் ஆசையைப் பூர்த்தி பண்ண முடியவில்லை.

* வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்.

? "போஃபர்ஸ் கம்பெனி வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர் ஒருவருக்குக் கமிஷன் கொடுத்திருந்தாலும் நமக்கு நிறைய அன்னியச் செலாவணி கிடைக்கிறதே என்று நாம் சந்தோஷப்பட வேண்டும்" என்று பூஜாரி கூறியிருக்கிறாரே?

! பூஜாரியின் உளறல்களுக்குக் கணக்கு வழக்கே இல்லை. அப்புறம் நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை என்று ஒரு விளக்கம் வேறு! அந்த விளக்கம் முன்னதை விடப் பெரிய உளறலாக முடியும்! பூஜாரியின் பேச்சையெல்லாம் அர்த்தம் பண்ணிக்



* புரியாத பேச்சு!

## நீங்கள் கேட்டவை — தராசு

கொள்ள முயற்சி செய்யாதீர்கள்! தலையில் ரோமம் ஏதும் மிஞ்சாது!

* எஸ். பி. மருதாசலம், விஜயமங்கலம்.

? சமீபத்தில் தில்லியில் நடந்த விமானப் படை அணி வகுப்பு விழாவில் மிராஜ்-2000 ரக விமானம் விழுந்து நொறுங்கியது பற்றி...?

! விமானம் செலுத்துவதில் சாகசச் செயல்களைச் செய்து காட்டுகிற பழக்கத்துக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்பதை உணர்த்தும் நிகழ்ச்சி. போர் விமானம் போர்ப் பயிற்சிக்கு மட்டுமே பயனாக வேண்டும். விமானப் படைக்கு விளம்பரம் தேடித் தரும் சாகசச் செயல்களுக்கு அல்ல.

* எம். விஜயா, பையூர்.

? தலாய் லாமாவுக்கு நோபல் பரிசு தந்ததற்குச் சீனா எதிர்ப்புத் தெரிவிக்கிறதே, ஏன்?

! சீனா கபளீகரம் செய்த திபெத் நாட்டை விடுவிக்கத்தானே சாத்வீக முறையில் தொடர்ந்து (முன்னேற்றமில்லை எனினும்) போராடிக் கொண்டிருக்கிறார் தலாய் லாமா! நோபல் அமைதிப் பரிசு அவருக்குத் தரப்பட்டதே அதற்காகத்தானே! சீனா சீறுவதில் வியப்பென்ன?

* எம். கே. சக்திவேல், சேலம்.

? டி. ராஜேந்தரை ஏன் கைது செய்ய வேண்டும்? ஏன் விடுவிக்க வேண்டும்?

! அவரை இன்னும் கொஞ்சம் உசுப்பி விடத்தான் கைது செய்து, தேவையின்றிப் பல நாட்கள் காவலில் வைத்திருந்து விடுவித்திருக்கிறார்கள்!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

பி. செல்வகுமார்,
எச். எம். பினாக் — 8,
ஆழியார் நகர்,
பொள்ளாச்சி வட்டம்,
— 642 101.



''ஆட்டோ டிரைவரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டது தப்பாப் போச்சு.''

''ஏன்?''

''தீபாவளிக்கு ஷர்ட் தைக்க, மீட்டருக்கு மேலே எவ்வளவு துணி எடுக்கணும்ன்னு கேட்கறார்!''

— ராதா வாசுதேவன்.

# மத்தாப்பூப் பக்கம்

''புடவைக்காகச் செலவு பண்ற பணத்தைக் குறைக்கும்படி என் மனைவிகிட்டே கண்டிஷனாச் சொன்னது தப்பாப் போச்சு!''

''ஏன்?''

''தாவணி கட்ட ஆரம்பிச்சுட்டா!''

— ஞா. ஞானமுத்து.



''ம்... காலம் ரொம்பத்தான் மாறிடிச்சி! 'நான்தான் 'பில்'லைக் கொடுப்பேன்' என்று சண்டை போடும் நண்பர்களைப் பார்த்திருக்கேன். 'நான்தான் 'பில்'லுக்கு மாவாட்டுவேன்' என்று சொல்லும் நண்பர்களை இப்போதுதான் பார்க்கிறேன்.''

— எஸ். பிரியதர்ஷினி.



நிருபர்: தீபாவளியும் அதுவுமாக் கைதிகளுக்கு ஸ்வீட் கொடுக்கிறப்ப ஏன் கண் கலங்கினீங்க?

கட்சித் தலைவர்: என்னோட பழைய நண்பர்களைச் சந்திச்சதுல கொஞ்சம் உணர்ச்சிவசப்பட்டு ஆனந்தக் கண்ணீர் விட்டுட்டேன்.''

— வி. ஒ. குமார்.





மனைவி: ''நம்ம பையனுக்குச் சமைக்கத் தெரியாதுன்னு பெண் வீட்லே சொல்லிட்டீங்களா?''

கணவர்: ''இல்லையே ஏன் அப்படிக் கேட்கறே?''

மனைவி: ''பெண்ணுக்கு முதலில் இருபது பவுன் நகை போட்றோம்னு சொன்னவங்க இப்போ பதினைந்து பவுன்தான் போடுவோம்ங்கிறாங்க.''

— எஸ். சுந்தரராஜ்.

வட்டமேஜை

# கறைபடிந்த மானுடத்தைக் கழுவும் வழி...

° கோவை பார்த்தசாரதியின் தைரியம் என்னை மெய்சிலிர்க்க வைத்து விட்டது! 'பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்' என்ற பழமொழியெல்லாம் இவர் முன் தூசாகி விட்டதே! தேன் கொட்டினால் நமக்கு வலி பிராணன் போய் விடும். அவர் என்னவென்றால் 'மெ சாப்பிட்டால் சரியாகி விடும்' என்கிறாரே!

சீர்காழி — 10. வி. வெங்கட்ராமன்.

° தேன், பாம்புகளுக்கிடையே வாழும் பார்த்தசாரதியின் சாதனையெல்லாம் ஒரு சாதனையா? பீர்க்கங்காய் முதல் பிரங்கி வரை எல்லாவற்றிலும் திருவிளையாடல்கள் செய்து, பண வீக்கத்தை மேலும் மேலும் படமெடுக்கச் செய்து, அவ்வப்போது வரி என்ற தேள்களால் கொட்டச் செய்து, இப்படிப் பலவிதமான அரசியல் விஷ ஜந்துக்களிடையே வாழும் மக்கள் அல்லவோ உண்மையான கின்னஸ் சாதனையாளர்கள்!

சென்னை — 92. கே. ராஜகோபாலன்.

° தலையங்கத்தில் காந்திஜியின் ஆன்மா பேசக் கண்டேன். நமது மாபெரும் தலைவர்கள் காந்தி ஜயந்தியைக் கொண்டாடும் லட்சணம் கசாப்புக் கடைகளில் காந்தி படத்தை மாட்டுவது போலத்தான்.

ஸ்ரீரங்கம். ஆர். கோபாலன்.

° என்ன சொன்னீங்க?! காந்தியத்தை மறந்து விட்டார்களா? வேற வேலை இருந்தாப் போய்ப் பாருங்க சார்! இங்கே நீங்களும் நானும்தான் காந்தியத்தைப் பத்திப் புலம்பிக்கிட்டிருக்கணும்.

திருச்சி — 16.
எஸ். ராஜகோபால்.

° புண்பட்ட போடிநாயக்கனூருக்குத் தமிழன்பன் கவிதை மருந்தாக அமைந்தது. இனி இது போன்ற புண் இந்தியாவில் வராமல் தடுப்பதுதான் கறை படிந்த மானுடத்தைக் கழுவுகின்ற வழியாகும்.

சென்னை — 75.
அ. இராமானுசம்.

° தமிழன்பனின் கவிதை சொல்லாத கருத்தை மருதுவின் ஓவியம் வெளிச்சம் போட்டுள்ளது. போடியில் இன்றும் பசி தீராத சாதிப் பிசாசு, அங்கிருந்து அதே வெறியுடன் வேறு திசை நோக்குகிற அவர் ஓவியம் சிந்திக்க வேண்டிய ஒன்றாகி விட்டது.

குடியாத்தம். கே. வி. எஸ். மணியன்.

° நம் நாட்டைப் பற்றி வெளிநாட்டு டூரிஸ்டுகள் உயர்வாகக் கூறும் போது மனம் பூரிப்படைகின்றது.

காட்டாங்குளத்தூர். எஸ். குருமூர்த்தி.

° எனது பாரதம் இத்தனை எழிலானது என்பது அந்த அயல் நாட்டுப் பயணிகள் சொல்லப் போய்த்தான் எனக்கே தெரிந்தது.

சென்னை — 28. எம். தியாகராஜன்.

° இந்திய கிரிக்கெட் அணியின் கேப்டனாக நியமிக்கப்பட்டுள்ள ஸ்ரீகாந்தைக் கார்ட்டூன் மூலம் வாழ்த்திய விதம் வித்தியாசமாக இருந்தது.

வேலூர் — 13. கே. ஆர். தேவேந்திரன்.

° ''கங்கிராட்ஸ் ஸ்ரீகாந்த்'' என்று போஸ்டரில் பார்த்ததும், சிறப்புக் கட்டுரை ஏதேனும் இருக்குமோ என்று பார்த்தால், கிடைத்தது ஏமாற்றம். ஒரு சிறிய துணுக்கு — ஒரு கருத்துப் படத்துடன் விட்டு விட்டீர்களே சார்!

திருச்சி — 2. வி. ரமேஷ்.

° சிறிதும் யோசிக்காமல் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு, அதனால் தம் குடும்பத்தினையும் கஷ்டத்தில் ஆழ்த்திக் கொண்டு காலத்தைக் கழிக்கும் இன்றைய சமுதாயப் பிரஜைகளில் சிலருக்குச் சரியான புத்தியைப் புகட்டும் வழியாய் அமைந்தது 'ஒற்றுமை நீங்கிடில்...' சிறுகதை. அழுத்தமான முத்திரையைப் பதித்து விட்டார் தமயந்தி. பாராட்டுக்கள்!

மதுரை — 1. பிரபாகர் ப்ரியன்.

° ''முதுமை மயக்கம்'' சிறுகதை இன்று சில, ஏன் பல, வீடுகளில் நடக்கும் நிகழ்ச்சியின் பிரதிபலிப்பு. பெற்று, வளர்த்து, இந்தச் சமூகத்தில் உயர உறுதுணையாக இருந்த பெற்றோர்களை உபசரித்துச் சுகமாக வைத்திராமல், விரட்டுவதிலும், விலக்கி வைப்பதிலும் குறியாக இருக்கும் அவர்களை நினைத்தால் நெஞ்சு வலிக்கிறது. கதையின் முடிவு இதமாக இருந்தது.

வேலூர் — 4.
கே. வெங்கடேசன்.

° அத்தனை சிறுகதைகளையும் படித்தேன். குளிர்ந்த மேகங்களாய் என் உள்ளத்தில் நிரம்பிப் போயின. எந்தக் கதையைக் குறிப்பிட்டுப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. எண்ணற்ற நட்சத்திரங்களின் மத்தியில் இந்த நட்சத்திரம்தான் அழகு என்று குறிப்பிட்டுக் காட்ட முடியுமா என்ன!

புதுவை — 13. கோ. தாமரை.

° ''நாங்கள் ஆரணியில் தயாராகும் பட்டுப் புடவைகள் விற்பதில்லை'' என்று 1.10.89 கல்கி இதழில் நான் சொன்னதாகப் பிரசுரமாகியுள்ளது. எங்கள் கடைக்கு வருகை தரும் வியாபாரிகளும் வாடிக்கையாளர்களும் ஆரணியில் தயாராகும் பட்டுச் சேலைகளை, அவர்களே பட்டுச் சேலைகள் தயாரிக்கும் வியாபாரிகளிடமிருந்தும் சிறு நெசவாளர்களிடமிருந்தும் நேரடியாக வாங்கிக் கொள்ளுவதால் நாங்கள் எங்கள் கடையில் ஆரணியில் தயாராகும் பட்டுச் சேலைகளை முதலில் விற்காமல் இருந்தோம்.

இப்பொழுது மற்ற ஊர் பட்டுச் சேலைகளுடன் ஆரணி பட்டுச் சேலைகளையும் நாங்கள் எங்கள் ஆரணி கடையிலும், வேலூர் கடையிலும் வைத்து விற்றுக் கொண்டுதான் இருக்கிறோம். ஆரணியில் தயாராகும் பட்டுச் சேலைகள் மிஷின் முறுக்கு ஏற்றிய பட்டு நூலைக் கொண்டும், நல்ல ஜரிகையைக் கொண்டும் தயாராவதால் நீடித்த உழைப்பிற்கான சேலைகளாகும்.

ஆரணி — 1. ஆர். என். சாமி.



# நிமிர்ந்து நில்! தெளிந்து சொல்!

தாழ்வுற்று, வறுமை மிஞ்சிய குடும்பங்களைச் சேர்ந்த மாணவர்கள். சராசரி படிப்பே ஏறவில்லை. அவர்களுக்குப் போய் 'கால்குலஸ்' போன்ற கஷ்டமான கணக்குகளைச் சொல்லித் தருகிறேன் என்று வகுப்பு ஆசிரியர் ஆரம்பித்தால் எதிர்ப்புக் கிளம்பாமல் இருக்குமா? பள்ளித் தலைவரும் இதர பல ஆசிரியர்களும் 'இந்த முயற்சி சிறுவர் சிறுமியரைச் சித்திரவதை செய்வதாகும்; அவர்கள் தாழ்வு மனப்பான்மையை அதிகரிக்க வைக்கும்' என்று கருத்துத் தெரிவிக்கின்றனர்.

வகுப்பாசிரியர் இந்தச் சவாலை ஏற்கிறார். தமது மாணவர்களின் கவனத்தைக் கவர ஒரு போராட்டமே நிகழ்த்துகிறார். அவர்களின் சுக—துக்கங்களில் பங்கு கொள்கிறார். கிண்டல்களை ஏற்றுத் திருப்பிக் கொடுக்கவும் செய்கிறார்! தோழமையுடன் பழகி, படிப்படியாக அவர்கள் உள்ளத்தில் ஒரு சாதனை வேகத்தை உருவாக்குகிறார். மேலும், 'அவர்களின் பெற்றோர் படிப்பறிவுள்ளவர்களாய் இருந்தால்தானே பிள்ளைகளுக்கு ஊக்கம் அளிப்பார்கள்' என்பதால், முதியோர் கல்வியும் புகட்டுகிறார்! இப்படி சக்திக்கு மீறி அவர் உழைக்கும் போது அவருக்கு 'ஹார்ட் அட்டாக்' வந்து விடுகிறது. ஆயினும் ஆஸ்பத்திரியில் இருந்தபடியே கல்விக் குறிப்புக்களை எழுதி மாணவர்களுக்கு அனுப்புகிறார்! உடல் தேறி திரும்பி வருகிறார்.

அந்த மாணவர்கள் நெகிழ்ந்து போய்ப் பூரண ஒத்துழைப்புத் தருகின்றனர். பள்ளியில் அனைவரும் பெருமைப்படுகிற மாதிரி எல்லோரும் நல்ல மார்க் வாங்கித் தேர்வில் வெற்றி பெறுகின்றனர்! ஆனால் கல்வி அதிகாரிகள் இதை நம்பவில்லை! 'பிற்படுத்தப்பட்ட சமூகப் பிள்ளைகள் இப்படி ஒரு சாதனை புரிவதாவது! நடக்கிற காரியமா? இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது! காப்பி அடித்திருப்பார்கள்!' — இவ்வாறு சந்தேகித்து விசாரணை நடத்துகிறார்கள்!

அவமானத்தைத் தாங்க முடியாமல் அதிகாரிகளுடன் வாதாடுகிறார் அந்த ஆசிரியர். விவாதம் பலனளிக்காததால் மறு தேர்வுக்கு ஒப்புக் கொள்கிறார். அத்தனை மாணவர்களும் ஒரே இரவில் மறுபடி 'ரிவிஷன்' செய்து, முன்னிலும் கஷ்டமான பரீட்சையை எழுதி, வெற்றி பெறுகின்றனர்!

'இது முழுக்க முழுக்க உண்மைக் கதை என்பதுடன், ஓர் ஆரம்பம் மட்டுமே! இந்தச் சாதனையாளர், தொடர்ந்து பல கல்வி ஆண்டுகளில் இதை விடவும் சிறந்த சாதனைகளை அடுத்தடுத்து நிகழ்த்திக் காட்டினார்' என்பதை உணர்த்துவதுடன் திரைப்படம் முடிகிறது.

ஆம், சினிமாதான்! 'பாக்ஸ் ஆஃபீஸ்' கண்ணோட்டத்தில் இங்கே திரையிடப்பட முடியாத சில உயர்ந்த படங்களை அவ்வப்போது அமெரிக்கக் கேந்திரத்தில் பார்க்க இயலும். அப்படி சமீபத்தில் பார்த்த ஒரு படம் **Stand and Deliver**, கதை அம்சத்தினால் மட்டுமின்றித் திரைப்படக் கலை நுணுக்கத்தாலும் பிரமிக்க வைத்தது!

நம் நாட்டில் உள்ள பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் போல் அமெரிக்காவிலும் உண்டு. அவர்கள் உலகின் பல்வேறு நாடுகளிலிருந்து பிழைப்புத் தேடி அமெரிக்காவில் குடியேறிய ஏழை — எளிய மக்கள். அந்தக் குடும்பங்களைச் சேர்ந்த பல்வேறு தாய்மொழிகளைக் கொண்ட — குழந்தைகளுக்கு விசேஷ அக்கறை எடுத்துப் பாடம் போதித்து, முன்னேறச் செய்து, அவர்களின் தாழ்வு மனப்பான்மையை நீக்கப் பாடுபடுவதைப் படத்தில் பார்க்கும் போது உள்ளம் நெகிழக் கண்கள் பனிக்கின்றன. அதே சமயம், 'நாம் இட ஒதுக்கீடு செய்வதுடன் திருப்தி அடைந்து விடுகிறோமே' என்ற வேதனையும் ஏற்படுகிறது.

வேதனை நீங்க முதல் படியாக, இந்தப் படத்தை ஒவ்வொரு பள்ளி ஆசிரியரும் கல்லூரி ஆசிரியரும் பார்க்க அரசு வசதி செய்து தரலாம். மேலும், 'சமுதாயப் பிரக்ஞையுடன் திரைப்படம் எடுப்பது எப்படி?' என்பதை உணர்ந்து கொள்ள, ஒவ்வொரு படாதிபதியும் திரைப்பட இயக்குனரும் இந்தப் படத்தைப் பார்த்தே ஆக வேண்டும் என்றும் வற்புறுத்தலாம்.

— கி. ராஜேந்திரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka

# நம்பகத்திற்குப் பல நல்ல காரணங்கள்.

கோத்ரெஜ் தரத்திற்கும், தொழில் நிபுணத்துவத்திற்கும் இன்னொரு பெயர். இன்று தனது நவீன, தானியங்கி ஆலையிலே, புதுமைத் தொழில்நுட்ப உதவியுடன் சர்வதேச தரத்திலான ரெஃப்ரிஜெரேட்டரை உருவாக்கியுள்ளது கோத்ரெஜ். கோத்ரெஜ் பெயரே நம்பகமானது ஆகையால் அதுதான் வேண்டுமென்கின்றனர் மக்கள்!




**அதிக குளுமை. அதிக வலு. அதிக சுத்தம்.** 100% பாலியூரித்தேன் இன்சுலேஷன் — **உலக தரத்திலான** ஏனைய ரெஃப்ரிஜெரேட்டர்களுக்கு **இணையாக்குகிறது.** இச்சிறப்பு **இன்சுலேஷன்,** கோத்ரெஜ் ரெஃப்ரிஜெரேட்டரை அதிக **காலம்,** அதிகுளுமையுடன் **வைக்கிறது;** வலுவும், உறுதியும் **சேர்த்து** ரெஃப்ரிஜெரேட்டரை கட்டுறுதியாக்குகிறது; காபினட் மற்றும் இன்னர் லைனருக்கிடையே **இடைவெளியை** முழுதும் சீல் செய்கிறது... குளுமை உள்ளே. பூச்சிபொட்டுகள் வெளியே!




கட்டுறுதியான, சக்தித் திறனுள்ள கம்ப்ரெஸர் - 160 முதல் 250 V வரை. விரிவான வோல்ட்டேஜ் ஏற்றத் தாழ்வுகளைத் தாங்க வல்லது. கூடவே **கூல்காற்று, விரைவில் குளிர்விக்கிறது. குறைந்த மின்செலவில்.**




என்றுமில்லா **விசேஷ வண்ணங்கள்.** டெஸர்ட் ஸாண்ட், டஸ்கி பீஜ், எலக்ட்ரிக் ரெட், ஸ்பிரிங் கிரீன், கூல் ப்ளூ, க்ளாஸிக் ஒயிட், இம்பீரியல் ஐவரி, மிஸ்டி கிரே, எல்லாம் நீடித்திருக்கும், கவர்ச்சியான எபாக்ஸி பவுடர் பூச்சுள்ள ஃபினிஷ் கொண்டவை.



**ULTRASPACE**

கோத்ரெஜ் 165 லிட்டர் மற்ற ரெஃப்ரிஜெரேட்டரை விட குறைந்தபட்சம் 30% **அதிக** இடமுள்ள காய்கறி டிரேயைக் கொண்டது. சரியாக திட்டமிட்ட ஷெல்ஃப் திறமுடன் வடிவமைத்த டோர்பேனல். பாட்டில்களும் முட்டைகளும் வைக்க அதிக இடம்.

**நம்பகம்... அதுவே** Godrej®

HTA 1643